

PIRANHA



ACTIVE



CADET HX



YANKEE



ROBO COP




Heroes start early.

Ride, race, take a tumble or even take a fall.

Because it's never too early to be a hero.





இந்தியப் புராதனக் கதைகள் 24



நவீன வேதாளக் கதை 19



மர்மக்குளம் 13



விநாயகர் 45



## பொருளடக்கம்




SUBSCRIPTION

For USA and Canada
Single copy $2
Annual subscription $20
*Remittances in favour of Chandamama India Ltd.*
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony,
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail : subscription@chandamama.org

பரிசளிப்புச் சந்தா
இந்தியாவைத் தவிர
மற்ற எல்லா நாடுகளுக்கும்
விமானத் தபால் வாயிலாக
பனிரெண்டு இதழ்களுக்கு ரூ. 900
இந்தியாவிற்குள் ரூ. 120
புக்போஸ்டில்
உங்கள் சந்தாத் தொகையை
டி.டி வாயிலாகவோ
அல்லது மணியார்டரிலோ
சந்தமாமா இந்தியா லிமிடெட் என்ற
பெயரை எழுதி அனுப்பவும்.

இப்பத்திரிகையில்
விளம்பரங்களை வெளியிடத்
தொடர்பு கொள்ள வேண்டிய
முகவரி:
சென்னை
Ph : 044 - 2231 3637
2234 7399
e-mail : advertisements@chandamama.org
டில்லி
மோனா பாட்டியா
Ph : 011 - 651 5111
656 5513 / 656 5516
மும்பை
ஷகீல் முல்லா
Mobile : 98203 - 02880
Ph : 022 - 266 1599
266 1946 / 265 3057



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# பரந்த நோக்குடையவர்கள் வேண்டும்

மதம் என்பது ஒரு வகை வாழ்க்கை முறையே என்றும், அது தனிப்பட்டவரின் விருப்பத்தைப் பொறுத்தது என்றும் அடிக்கடி வலியுறுத்தப்படுகிறது. அதற்கு மக்கள் பிரிவினர் தங்கள் முறைக்கு ஏற்ப பெயர்களைக் கொடுக்கிறார்கள். அதில் பல சடங்குகளையும் வழிமுறை களையும் அடையாளங்களையும் சின்னங்களையும் அந்தந்த சூழ்நிலை களுக்கு ஏற்ப புகுத்தியுள்ளார்கள். ஆனால் ஒரு சிலர் மத உணர்ச்சி கொண்டு பிறரை அவர்களது சடங்குகளைச் செய்ய விடாமல் தடுக் கிறார்கள். இதனால் மதக்கலவரங்கள் மூள்கின்றன. இதனால் அமைதி யுடன் நாமும் வாழ்ந்து பிறரை வாழவிடுவது என்பது மறைந்து போகிறது.

அண்மையில் மும்பையில் ஒரு மாணவர் நம் குடியரசுத் தலைவர் டாக்டர் அப்துல்கலாமிடம் மதக் கலவரங்கள் நேராமல் எப்படித் தடுப்பது என்று கேட்டபோது அவர் கூறியது இதுதான்-''மதங்கள் ஆன்மீக சக்தியை வளர்ப்பதால் மதக் கலவரங்களைத் தடுக்கலாம். அப்போது தான் நம்மிடையே உள்ள ஏற்றத் தாழ்வுகள் மறைந்து சமநிலை ஏற்படும். இதற்கு மக்களுக்குப் பரந்த நோக்கு தேவை. இதனைப் பள்ளிப் பாடங்கள் மனித நேயம் பற்றிக் கூறி மாணவர்களை உயர்நிலைக்குக் கொண்டு வரலாம்.''

மனித வாழ்வில் சமூக சீர்திருத்தங்களைச் செய்து மனிதனைப் பண்படுத்த மதம் முக்கிய இடத்தை வகித்து வருவது நம் நாட்டில் மூவாயிரம் ஆண்டுகளாகத் தொடர்ந்து நடக்கிறது. இது வரலாறு கூறும் உண்மை. இன்றைய இளம் தலைகள் வளர்ந்து முதிர்ச்சி பெற்ற குடிமகன் களாகி நாட்டில் அமைதியையும் நல்லிணக்கத்தையும் நிலையாக ஏற்படுத்த வேண்டும் என்றே 'அம்புலிமாமா' விரும்புகிறது.

ஆசிரியர் : **விஸ்வம்**
Visit us at : http://www.chandamama.org



# இந்திய மாவீரர்கள் புதிர்ப் போட்டியில் கலந்து கொண்டு அற்புதமான பரிசுகளை வெல்லுங்கள்

இங்கு சில முனிவர்கள், ஆன்மிக மகான்கள் பற்றிய வினாக்கள் உள்ளன. விடைகள் கூறுகிறீர்களா?

முற்றிலும் சரியான விடைகள் கொண்ட மூன்று கூப்பன்களுக்கு சைக்கிள்கள் பரிசளிக்கப்படும்*



1. நான் இந்தியாவின் ஆதிகாவியத்தின் ஆசிரியர். நான் யார்?

----------------------------------------

2. முதலில் நான் ஒரு மன்னனாகவும் பிறகு முனிவராகவும் ஆனேன். நான் சகுந்தலையின் தந்தை. நான் யார்?

----------------------------------------

3. நான் விந்திய மலையை அடக்கித் தலை குனிய வைத்தேன். அதன் பின் தெற்கே போய் அங்கேயே இருந்துவிட்டேன். நான் யார்?

----------------------------------------

4. நான் மகாகாவியமான மகாபாரதத்தின் ஆசிரியர். வேதங்களை நான்கு பிரிவுகளாக்கி புராணங்களையும் உபநிஷத்துக்களையும் எழுதியவன் நான் யார்?

----------------------------------------

5. நான் பிரம்மாவின் புதல்வன், நான் ராமருக்கும் அவரது சகோதரர்களுக்கும் குரு. நான் யார்?

----------------------------------------

ஒவ்வொரு வினாவிற்கும் அதன் கீழுள்ள வெற்றிடத்தில் விடையைத் தெளிவாக எழுதவும். இந்த ஐவரில் உங்களுக்கு பிடித்தமான தேசியத் தலைவர் யார் என்றும் அதற்கான காரணங்களை பத்து சொற்களில் எழுதவும். எனக்கு மிகவும் பிடித்த புராண மாவீரர் ..............................

..............................

..............................

போட்டியாளரின் பெயர்: ..............................

வயது: .................. வகுப்பு: ..............................

முகவரி: ..............................

..............................

பின்கோடு: .................. போன்: ..............................

போட்டியாளரின் கையொப்பம்: ..............................

பெற்றோரின் கையொப்பம்: ..............................

இந்தப் பக்கத்தைக் கத்தரித்துக் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**இந்திய மாவீரர்கள் புதிர்ப்போட்டி-19**
**சந்தமாமா இந்தியா லிமிடெட்**
நெ. 82. டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை-600 097
அனுப்ப வேண்டிய கடைசித் தேதி மே 5, 2003

நிபந்தனைகள்:

1. இப்போட்டி 8 முதல் 14 வயதிற்குட்பட்டவர்களுக்கு மட்டும்.
2. *எல்லா மொழிப்பதிப்புகளின் கூப்பன்களிலிருந்தும் மூன்று பேர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இச்சிறார்களுக்கு அவர்களுக்கு ஏற்ற அளவு சைக்கிள்கள் வழங்கப்படும். முற்றிலும் சரியான விடைகள் கொண்ட பல கூப்பன்கள் இருந்தால், 'எனக்கு மிகவும் பிடித்தமான மாவீரர்' என்ற தலைப்பில் எழுதப்பட்ட வாக்கியங்களில் சிறந்தனவாகத் தேர்ந்தெடுக்கப்படுபவைகளுக்குப் பரிசு அளிக்கப்படும்.
3. நடுவர்களின் தீர்ப்பே இறுதியானது.
4. இப்போட்டி தொடர்பாக எவ்விதக்கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ளப்படமாட்டாது.
5. வெற்றிபெற்றவர்களுக்குத் தபால் வாயிலாக முடிவுகள் தெரிவிக்கப்படும்.

இப்பரிசுகளை உங்களுக்கு அளிப்பவர்கள்



# This vacation explore the fascinating world of computers.

## Presenting SWIFT Summer Camp - the fun way of learning computers.

Vacations are all about fun, discovery and doing something out of the ordinary. Which is why SWIFT presents the Summer Camp - an exciting 24-hr course designed especially for you to propel you into the world of computers.

It's loaded with interesting activities that will keep you hooked and stimulate that eager little mind of yours. So waste no time and drop in with your parents at the nearest NIIT centre. And get set to take to the skies.

- Computer basics
- Flight simulation game
- Multimedia
- Explore the Universe module
- Internet
- Personality Development module

Visit the nearest NIIT centre for a 1-hour demo of SWIFT Summer Camp. And get a chance to win a computer.

Name:....................................

Std.:......................................

Address:.................................

..............................................

NIIT SWIFT

The easiest way to learn computers

Supported by:



# கல்பனா சாவ்லாவுக்கு அஞ்சலி



இந்தியாவில் பிறந்த விண்வெளி வீராங்கனை கல்பனா சாவ்லா விண் வெளிக் கலமான கொலம் பியா விபத்திற்குள்ளான போது இறந்து போனார். உலகமே இந்த விபத்தைக் கேட்டு துயரக் கடலில் மூழ்கியது.

ஹரியானா மாநிலத்தின் கர்னால் வாசிகளான பனாரசிதாசிற்கும் ஸ்வாங் கீதாவுக்கும் பிறந்த இவர் சிறுவயது முதலே சந்திரனை எட்டிப் பிடிக்க வேண்டும் என்ற ஆசை கொண்டவர். இவர் வளர்ந்து பெரியவளானதும் ஆகாய விமானப் பயணம் செய்ய ஆசைப்பட்டு கர்னால் ஃபிளையிங் கிளப்பில் போய் இருந்து விமானங்கள் பறக்கும் விதத்தை உன்னிப்பாக கவனித்து வந்தார்.

இவர் தமது பதினைந்தாவது வயதில் சண்டிகடில் உள்ள பஞ்சாப் பொறி இயல் கல்லூரியில் ஏரோநாட்டிகல் (விமான) பொறிஇயலைக் கற்கச் சேர்ந்தார். பிறகு அதே துறையில் உயர்கல்வி பெற அமெரிக்காவில் டெக்ஸாஸ் பல்கலைக் கழகத்தில் சேர்ந்தார். கொலராடோ பல்கலைக் கழகத்தில் டாக்டர் பட்டம் பெற்றார். 1994-ல் விண்வெளிக்கலம் பற்றிக் கல்வி அறிவுபெற நாஸாவில் சேர்ந்தார். 1999 நவம்பர் 19ல் விண் வெளிக்கலம் கொலம்பியாவில் பயணம் செய்யத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இத னால் விண்வெளியில் பயணம் செய்த முதலாவது இந்தியப் பெண்மணி என்ற பெயரும் பெற்றார். இவர் விண்வெளி யில் நடந்தும் காட்டினார். கொலம்பியா விண்வெளிக் கலத்தில் இரண்டாவது முறையாகப் பயணம் செய்ய இவர் கடந்த ஜன வரி 16ல் தேர்ந்தெடுக்கப் பட்டார். தனது கணித ஆசி ரியையாக இருந்த நிர்மலா நம்பூதிரிபாடிடம் விண் வெளிக்கு எடுத்துச் செல்ல நல்ல பொன் மொழி கொண்ட துணியைத் தயாரித்துக் கொடுக்குமாறு வேண்டவே அவரும் 'எப்போதும் வழி காட்டியவாறே' என்று ஆசிரியரைக் கைகூப்பி வணங்குவதை பட்டுத் துணியில் எழுதிக் கொடுத்தார்.

ஆம், கல்பனா இளம்பெண்களுக்கு வழிகாட்டியாகவே விளங்கினார். தாம் இளம் வயதில் படித்த டாகூர் பாலநிகேத னிலிருந்து இரு மாணவிகளைத்தானே அமெரிக்காவிற்கு அழைத்துப்போய் யாவற்றையும் காட்டினார். "கனவு நனவாகும். அதற்கான இடைவிடாத முயற்சி மட்டும் இருந்தால் எதிலும் வெற்றி பெற்றுவிடலாம்," என்ற செய் தியை இவர் விண்கலத்தில் பயணம் செய்தபோது பூமிக்கு அனுப்பினார்.

உலகையே கலங்க வைத்த விபத்தில் உடல் அழிந்து போனாலும் இவரது வாழ்க்கை இளைய தலைமுறையின ருக்கு வழிகாட்டியாக உள்ளது. இவர் அடைந்த வெற்றி என்றென்றும் நிலைக் கக் கூடியது. தாம் பிறந்த நாடான பாரத தேசத்தின் புகழை உயர்த்தி விண்வெளி யில் கொடிகட்டிப் பறந்த கல்பனா சாவ்லாவிற்குப் பணிவுடன் அஞ்சலி செலுத்துவோம்.



Do you want your children to sharpen their faculties by working on puzzles?
**Come to Junior Chandamama for loads of puzzles and games.**



Are you looking out for interesting new stories to be read out to the kiddies?
**Pick up a copy of Junior Chandamama, and you'll find them.**



Does your child have a taste for colouring
and you want to develop the habit?
**Junior Chandamama is what you must get for your child.**




Good habits begin when young. That's what you think, but don't know how to drill this into your child's mind.
**Check out Junior Chandamama where values are taught subtly.**



Want your kid to learn all about the culture and heritage of India?
**Only Junior Chandamama can help you.**

# Junior CHANDAMAMA

**FIRST ISSUE TO HIT THE STANDS IN APRIL 2003!**

## PAGE AFTER PAGE WILL KINDLE YOUR CHILD'S IMAGINATION

**ISSUE AFTER ISSUE MONTH AFTER MONTH**

Special introductory offer to child-subscribers!

Rs. 100 for 12 issues (instead of Rs. 120)

Offer closes on June 30, 2003.

# கிழவனுக்கா கல்யாணம்?

கிருஷ்ணசர்மா வேறு ஊரிலிருந்த தன் நண்பரான ராமசர்மாவைக் காணச் சென்றார். அங்கு அவர் தன் நண்பருடன் பேசிக் கொண்டிருக்கையில் அந்த நண்பரின் இரண்டு வயது பெண் குழந்தை மழலை பேசி ஓடி வந்தது. நல்ல சிவப்பு நிறமாயும் 'கொழு கொழு' என்று வளர்ந்திருந்த அப்பெண் குழந்தையைக் கண்டு கிருஷ்ணசர்மா மகிழ்ந்து போனார்.

அவர் ராமசர்மாவிடம், ''இவள் உங்கள் மகளா?'' என்று கேட்கவே, ராமசர்மாவும் ''ஆம். இவளுக்கு இரண்டு வயதாகிறது,'' என்றார். கிருஷ்ணசர்மாவும், ''எனக்கு இவளை மிகவும் பிடித்திருக்கிறது. என் நான்கு வயது மகனுக்கு இவளை கல்யாணம் செய்துவிடலாம். இப்போதே நிச்சயித்துவிடலாமா?'' என்று கேட்டார்.

அப்போது ராமசர்மா, ''இப்போது உங்கள் மகன் வயது என் மகளின் வயதில் இரண்டு மடங்கு. என் மகளுக்கு இருபத்தைந்து வயதாக இருக்கையில் உங்கள் மகனின் வயது இவளது வயதைப் போல இரு மடங்காகி ஐம்பதாகிவிடும். நான் ஐம்பது வயதுக் கிழவனுக்கா என் மகளை மணம் செய்து வைப்பேன்? முடியாது!'' என்றார்.

கிருஷ்ணசர்மா ராமசர்மாவின் அறியாமைக்கு மனதுள் சிரித்துக் கொண்டு மேற்கொண்டு பேசவில்லை.





# மதியூக மனைவி

பல ஆயிரம் ஆண்டுகளுக்குமுன் விந்திய மலைப்பகுதியில் அடர்ந்த ஒரு காட்டுப் பகுதியில் லம்போ தரன், விருகோதரன் என்ற இரு ராட்சஸர்கள் இருந்தார்கள். இரு வரும் பலசாலிகள். மலை போல பருமனானவர்கள். இருவரும் தனித் தனி குகையில் வசித்தே வந்தார்கள். ஒரே காட்டில் அவர்கள் வசித்து வந்தபோதிலும் ஒருவர் மற்றவரைப் பார்த்ததே இல்லை.

விருகோதரனைப் பற்றிக் கேள் விப்பட்டிருந்த லம்போதரன் அவ னைப் பார்க்க ஆசைப்பட்டான். அதனால் ஒருநாள் அவன் விருகோ தரன் வசிக்கும் குகையை நோக்கிச் சென்றான். அவனை அடித்து வீழ்த்தி விட்டு அப்பகுதியில் தனக்கு மிஞ்சி யவன் யாருமே இல்லை என்று பெயர் பெற வேண்டும் என்பதே லம்போதரனின் எண்ணம். அதனால் தன் கதாயுதத்தை எடுத்துத் தோளின் மீது வைத்துக் கொண்டு அவன் விருகோதரனின் குகையை நோக்கிச் சென்று கொண்டிருந்தான்.

தன்னைத் தாக்க லம்போதரன் வந்து கொண்டிருப்பதை விருகோ தரனும் அவனது மனைவி குண்டோ தரியும் பார்த்துவிட்டார்கள். விரு கோதரன் பயந்தவாறே தன் மனைவி யிடம், ''லம்போதரன் என்னைப் போல பலசாலி என்றாலும் அவன் வைத்திருக்கும் கதையால் எதிரியை ஓர் அடி அடித்தாலே உயிர் போய் விடும். அதற்காகத் தான் பயப்பட வேண்டியிருக்கிறது,'' என்றான்.

குண்டோதரியோ, ''பூ! இது தானா? நீ நான் சொல்கிறபடி செய். பேசாமல் நன்கு முகத்தை மூடிக் கொண்டு படுத்திரு. நான் எழுந்திரு என்று சொல்லும்வரை நீ எழுந்திருக் காதே. லம்போதரனை மயக்கி வந்த வழியே திரும்பிப் போகும்படி நான் செய்துவிடுகிறேன், பார்!'' என்றாள். விருகோதரனும் தன் மனைவி கூறு வது போலவே செய்வதாகக் கூறிக் கட்டிலில் ஆடாமல் அசையாமல் படுத்துவிட்டான்.

லம்போதரன் வேகவேகமாக வந்து விருகோதரன் குகையின் முன் நின்று இடிஇடிக்கும் குரலில், ''இது தான் விருகோதரன் குகையா? அடே,

விருகோதரா! வாடா வெளியே! எனக்குப் பயந்து ஒளிந்து கொண்டிருக்கிறாயா?''.என்று உறுமினான். அப்போது குண்டோதரி குகை வாசலில் நின்று ''யார் நீங்கள்? தெரியவில்லையே! நான் அவருடைய மனைவி குண்டோதரி. என் கணவர் இப்போது இங்கே இல்லை. வேட்டையாடக் காட்டிற்குள் போயிருக்கிறார். என் மகன் மட்டுமே இப்போது உள்ளே படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கிறான். சத்தம் செய்யாமல் உள்ளே வாருங்கள். வீடு தேடி வந்தவர்களை உபசரிப்பது என் கடமை அல்லவா?'' என்றாள்.

லம்போதரன் குண்டோதரியை ஏற இறங்கப் பார்த்தான். தன்னைப் போலவே பருமனாயும் உடல் வலுவும் கொண்டிருப்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டான். பிறகு அவன் குகைக்குள் சென்று கட்டிலில் படுத்திருந்த விருகோதரனைப் பார்த்தான். அவன் தான் விருகோதரனை அதற்கு முன் பார்த்ததும் இல்லையே! அவன் குண்டோதரியிடம், ''இவனா உன் மகன்! அடேயப்பா! உன்னைவிட பலமிக்கவன் போலத் தெரிகிறதே!'' என்று ஆச்சரியப்பட்டவாறே கேட்டான்.

குண்டோதரியோ, ''இவனைப் பார்த்தே இப்படி மலைத்துப் போய் விட்டாயே! இவனைப் போல உருவத்திலும் பலத்திலும் இரண்டு மடங்கு உள்ள என் கணவனைக் கண்டால் நீ பயந்து அலறி அடித்துக் கொண்டு ஓடியே போய்விடுவாய் போல இருக்கிறதே!'' என்று கூறிச் சிரித்தாள்.

உண்மையிலேயே லம்போதரனுக்கு உதறல் கண்டது. மகனும் மனைவியுமே இப்படி இருந்தால் விருகோதரன் எவ்வளவு பலசாலியாயும் பருமனாயும் இருப்பான் என்று எண்ணி பயந்து போனான். ஆயினும் அதை வெளியே காட்டிக் கொள்ளாமல், ''அப்படி ஒன்றும் இல்லை. நான் விருகோதரனை இது வரை பார்த்ததே இல்லை. இந்த வழியே போகும்போது அவனைப் பார்த்துவிட்டுப் போகலாம் என்றே வந்தேன்,'' எனக் கூறிவிட்டு அங்கிருந்து சென்றுவிட்டான்.

லம்போதரன் போன பின் குண்டோதரி விருகோதரனிடம், ''லம்போதரன் போய்விட்டான். பயப்படாமல் எழுந்திரு!'' என்றாள். அவனும் எழுந்து ''அடேயப்பா! வாய் வார்த்தையாலேயே அவனை பயமுறுத்தி அனுப்பிவிட்டாயே. உனக்கு உள்ள அறிவு வேறு யாருக்கு வரும்!'' என்று பாராட்டினான்.





# மர்மக் குளம்

## 14

*(ஜெயசீலனும் சித்தசாதகனும் நதிக்கரையில் மகரகேதுவையும் தேவசர்மா வையும் கண்டார்கள். அப்போது ஆகாய வழியாய் அன்னப் பறவைகள் கொண்டு வந்த ரதம் நதியில் இறங்கியது. அதிலிருந்து எங்கோ விழுந்த மர்மக்குள மகேஸ்வரனையும் அரசகுமாரியையும் அரசகுமாரனையும் எப்படிக் காப்பாற்றுவது என்று அவர்கள் யோசிக்கலானார்கள். அப்போது சில ஜலராட்சஸர்கள் அந்த ரதத்தைத் தாக்கலானார்கள். பிறகு—)*

ஜல ராட்சஸர்கள் ரதத்தைத் தாக்க முயல்வதைக் கண்ட ஜெயசீலன் தூர எறியப்போன வாளை எறியாமல் கையில் வைத்துக் கொண்டு, ''இவர்களா ஜல ராட்சஸர்கள்! ஓநாய் முகம் மனித உடல். பார்க்க வேடிக்கையாக இருக்கிறதே!'' என்றான். மகரகேதுவும், ''அவர்கள் அந்த ரதத்தை கைப் பற்ற முயல்கிறார்கள். அதை தடுக்க வேண்டும்,'' என்றான்.

அப்போது ஜெயசீலன் சட்டெனத் தன் வாளை உறைக்குள் போட்டு விட்டு, ''மகரகேது! உன் மகேஸ்வரன் எங்கள் மன்னரின் மகனையும், மகளையும் தூக்கிக் கொண்டு சென்றான். அதனால்' உன் மன்னனை அடக்கி ஒடுக்கி எம் அரசகுமாரனையும் அரச குமாரியையும் மீட்டுச் செல்லும் பொறுப்பை நான் ஏற்றிருக்கிறேன். உன் மகேஸ்வரன் மட்டும் இப்போது அந்த ரதத்தில் இருந்திருந்தால் என்ன செய்திருப்பேன்



தெரியுமா?'' என்று கடுமையாகக் கூறினான்.

அதைக் கேட்ட மகரகேது பயந்து போய் தேவசர்மாவிடம், ''ஐயா! ஜெயசீலர் ஏனோ எங்களைப் பகைவர்களாகக் கருதுகிறார். எம் அரசர் அரசகுமாரியையும் அரசகுமாரனையும் துன்புறுத்தவே இல்லை. மாறாக அவர்களை நன்கு கவனித்துக் கொண்டு தான் இருந்தார்,'' என்று கூறி ஜெயசீலனுக்கு அதைத் தெரிவிக்கவும் வேண்டினான்.

தேவசர்மாவும், ''ஜெயசீலா! இப்போது நீ பகைமை கொள்ளக்கூடாது. உன் வாளைப் பயன்படுத்தியே ஆக வேண்டும். எனவே வாளை உறையிலிருந்து எடு!'' என்றான். ஜெயசீலனும் வாளைக் கையில் எடுத்துக் கொள்ளவே, சித்த சாதகனும் ''சரி. நானும் என் வாகனத்தில் ஏறிக் கொள்கிறேன். எல்லோரும் சேர்ந்து ஜல ராட்சஸர்களை விரட்டி அடிக்கலாம்,'' என்று உற்சாகத்துடன் கூறினான். சில நொடிகளிலேயே அவர்கள் யாவரும் நதியை அடைந்தார்கள்.

ஜல ராட்சஸர்கள் மகேஸ்வரனின் ரதத்தைத் தாக்க முயன்று கொண்டிருந்தார்கள். அதிலிருந்த மெய்க்காவலாளி அந்த ரதத்தை நதியில் அங்கும் இங்கும் செலுத்தி அவர்களுக்குப் போக்குக் காட்டினான். இதற்குள் மகரகேது நீர்யானை மீது ஏறி அவர்களை நோக்கிச் சென்றான். சித்தசாதகனும் மனிதக் குரங்கின் மீது அமர்ந்து செல்லவே அவர்களைக் கண்ட ஜல ராட்சஸர்கள் பயந்து விட்டார்கள். அவர்கள் தப்ப முயன்ற போது மகரகேதுவும் சித்தசாதகனும் பயங்கரமாகத் தாக்கவே ஜலராட்சஸர்கள் பயந்து ஓடலானார்கள். அந்தத் தாக்குதலில் பலர் இறந்து போனார்கள். நீர்யானை தன் துதிக்கையால் ஜலராட்சஸர்களைப் பிடித்துத் தூக்கி எறிந்தது. மனிதக் குரங்கும் பலரைக் குத்தி ஆற்றில் போட்டது. ஜெயசீலனும் தன் வாளுக்குப் பலரை இரையாக்கினான்.

இப்படியாகப் பல ஜலராட்சஸர்கள் ஆற்று நீரில் அடித்துச் செல்லப் பட்டார்கள். இந்த பயங்கரத் தாக்குதலை முடித்துவிட்டு யாவரும் கரைக்கு வந்தார்கள். ஜெயசீலன் மட்டும் ரதத்தில் அமர்ந்து அதிலிருந்து மெய்காவலாளியிடம் ரதத்தைக் கரையோரம் கொண்டுபோய் நிறுத்தும்படி கூறினான். ஆனால் அந்த மெய்க்காவலாளியோ, ''நான் யார்

தெரியுமா? சர்வ சக்தியுள்ள மர்மக் குள மகேஸ்வரனின் மெய்க் காவலாளி. என்னை யாராலும் எதுவும் செய்ய முடியாது,'' என்று கூறி அலட்சியமாக ஜெயசீலனைப் பார்த்தான்.

ஜெயசீலனோ, ''ஓஹோ! நீ அவ்வளவு சக்தி வாய்ந்தவனா? அதைப் பரீட்சித்துப் பார்க்கிறேன்,'' எனக் கூறி அவன் மீது பாய்ந்து அவனது கழுத்தைப் பிடித்து அமுக்கினான். மெய்க் காவலாளி பலமாகக் கத்தி, ''ஐயோ! உனக்கு இவ்வளவு பலமா? என்னை ஒன்றும் செய்யாதே. விட்டு விடு'' என்று அலறினான். ஜெயசீலனும் தன் பிடியைத் தளர்த்தி, ''முதலில் இந்த ரதத்தைக் கரைக்குக் கொண்டு போய் நிறுத்து. உன்னிடம் சில விஷயங்கள் பற்றிப் பேச வேண்டும்,'' என்றான். மெய்க்காவலாளியும் ஜெயசீலன் கூறியபடியே ரதத்தைக் கரைஓரத்தில் கொண்டுபோய் நிறுத்தினான்.

இதே சமயம் சித்தசாதகனின் மனிதக்குரங்கு ஒரு ஜல ராட்சஸனைப் பிடித்து அடித்து உதைத்து இழுத்துக் கொண்டு ஜெயசீலன் இருக்கும் இடத்திற்கு வந்தது. மனிதக் குரங்கோடு வந்த சித்தசாதகன் தேரில் இருந்த மெய்க்காவலாளியைப் பார்த்தான்.

அவனோ ரதத்தைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டு, ''ஐயா! இது சாதாரணமான ரதம் அல்ல. இந்த அன்னப்பறவைகள் இதற்கு அழகு செய்யக் கட்டப்பட்டவை. எங்கள் மகேஸ்வரன் எண்ணினால் இது



ஈரேழு உலகங்களிலும் சுற்றிவிட்டு வரும் சக்தி பெற்றது. சக்திவாய்ந்த இதனைச் சாதாரண ரதம் என்று எண்ணிவிடாதீர்கள்,'' என்றான்.

சித்தசாதகனும், ''இது சக்தி வாய்ந்தது என்றால் ஆகாயத்தில் இதனைக் கழுகுகள் தாக்கியபோது ஏன் கவிழ்ந்தது? உங்கள் மகேஸ்வரனை ஏன் கீழே விழவைத்தது? ஏன் வீண் கதை கூறுகிறாய்?'' என்று கேட்டான். ஜெயசீலன் சித்தசாதகனை மேலும் பேச விடக் கூடாது என்று எண்ணி ''சாதகா! இந்த ரதத்திலிருந்து மர்மக் குள மகேஸ்வரன் மட்டுமா காட்டில் எங்கோ விழுந்தான்? அவனோடு அரசனின் மகனும் மகளும் சேர்ந்து விழுந்திருக்கிறார்களே! இதை நினைவில் கொண்டு நாம் செயல்பட வேண்டும்,'' என்றான்.

அப்போது மகரகேது ஜெயசீலனிடம், ''நாங்கள் எங்கள் மன்னரைத்



தேடிக்கண்டு பிடிக்க வேண்டும். அதனால் இந்த ரதத்தில் அமர்ந்து சென்றாலே அம்முயற்சியில் நான் வெற்றிபெற முடியும்,'' என்றான்.

ஜெயசீலனோ, ''உன்னைப் போக விடமாட்டேன். முதலில் எனக்கு அரசகுமாரியையும் அரசகுமாரனையும் பற்றித் தெரிந்தாக வேண்டும். உன் மகேஸ்வரன்தான் அவர்களைக் கவர்ந்து வந்தான். அதனால் அவன்தான் அவர்களுடைய க்ஷேமத்திற்குப் பொறுப்பு அவர்களுக்கு ஏதாவது கெடுதல் நேர்ந்திருந்தால் உங்களை எல்லாம் சும்மா விடமாட்டேன்,'' என்று ஆவேசத்துடன் கூறினான்.

அப்போது தேவசர்மா ஜெயசீலனிடம், ''நண்பா! ஆவேசத்தில் அறிவை இழந்து விடாதே! வீணாகப் பகை கொள்வதால் பயன் ஏதும் இல்லை. முதலில் அவர்களைத் தேடிக் கண்டுபிடிப்பதே நம் வேலை. அதைச் செய்வோம்'' என்றான். ஜெயசீலனும், ''தேவா! நீ சொல்கிறபடி செய்வோம். ஆனால் பயங்கரமான காட்டில் அவர்களை எப்படித் தேடிக் கண்டுபிடிப்பது? அதற்கான வழி பற்றி யோசித்துக் கொண்டே செல்வோம்,'' என்றான்.

அப்போது ரதத்தில் இருந்த மெய்க்காவலாளி ஜெயசீலனிடம், ''ஐயா! எங்கள் மன்னரும் உங்கள் அரசகுமாரனும் அரசகுமாரியும் காட்டில் எந்த இடத்தில் விழுந்தார்கள் என்பதை என்னால் காட்டமுடியும். அங்கு போய்த்தேடலாம்,'' என்றான். அதைக் கேட்ட ஜெயசீலன், ''அப்படியானால் நாம் இப்போதே அங்கே போகலாம். எல்லோரும் இந்த ரதத்தில் அமர்ந்து செல்ல முடியுமா?'' என்று கேட்டான்.

அப்போது மெய்க்காவலாளி, ''இவ்வளவு பேரும் இதில் செல்ல முடியாதே! மகரகேது தன் வாகனத்தோடு இதில் ஏறினால் வேறு யாருக்கும் இடமே இராது. சித்தசாதகனை மனிதக் குரங்கோடு இதில் ஏற்றினால் அது இந்த ரதத்தையே நாசப்படுத்தி விடும்,'' என்றான்.

அப்போது தேவசர்மா, ''அப்படியானால் இப்படிச் செய்வோம். வாகனங்கள் உள்ள அந்த இருவரும் அவற்றில் அமர்ந்து வர வேண்டும். மற்றவர்கள் இந்த ரதத்தில் ஏறிச் செல்லலாம்,'' என்றான்.

ஜெயசீலனும், ''நல்ல யோசனைதான் அப்படியே செய்யலாம்,'' என்று கூறியபோது சித்தசாதகன்

குறுக்கிட்டு, ''நானும் மகரகேதுவும் சேர்ந்து வருவதா? நான் இவனை நம்ப மாட்டேன். வழியில் இவன் ஏதாவது செய்து என்னை ஒழிக்கப் பார்ப்பான்,'' என்றான்.

அப்போது மகரகேது, ''சாதகா! நான் உனக்கு எவ்விதக் கெடுதலையும் செய்யமாட்டேன். நாம் எல்லோரும் சேர்ந்து ஒரு வேலையைச் செய்யப் போகிறோம். இதைக் கெடுக்க மாட்டேன். நீயும் வழியில் என்னைத் தாக்கக் கூடாது. தெரிந்ததா?'' என்றான்.

தேவசர்மாவும், ''நான் ஆரம்ப முதலே எல்லோரும் பகைமை கொள்ளக் கூடாது என்று சொல்லி வருகிறேன். அதையேதான் இப்போதும் திரும்பச் சொல்கிறேன். நமக்குள் சண்டை சச்சரவு வேண்டாம். முழுமனதுடன் நம் வேலையில் இறங்குவோம்,'' என்றான். இதன் பிறகு மகரகேதுவையும் சித்த சாதகனையும் தவிர மற்றவர்கள் எல்லோரும் ரதத்தில் ஏறினார்கள்.

மெய்க்காவலாளி ரதத்தை ஓட்டிய வாறே, ''அதோ தெரிகிறதே உயரமான மலை. அதன் அடிவாரத்தில் உள்ள காட்டில்தான் எம்மன்னரும் அரசகுமாரனும் அரசகுமாரியும் ரதத்திலிருந்து கீழே விழுந்தார்கள். அதோ ஓரிடத்திலிருந்து புகை கிளம்பி வந்து கொண்டிருக்கிறதே, அதுதான் அந்த இடம்,'' என்றான். ஜெயசீலனும் ''சரி. அங்கேபோய்த் தரை இறங்கலாம்,'' என்றான்.

ரதம் கிளம்பிச் சென்ற பின் சித்த சாதகன் மகரகேதுவிடம், ''இனி நாமும் கிளம்பலாமே!'' என்றான். அப்போது சித்த சாதகனிடம் அகப்பட்ட ஜல ராட்சஸன், ''என்னைத்



தனியாகவா விட்டு விட்டுப் போகிறீர்கள்? என்னையும் உங்களோடு அழைத்துச் செல்லுங்கள். நீங்கள் என்ன வேலை செய்யச் சொன்னாலும் செய்கிறேன்,'' என்றான்.

சித்தசாதகனும், ''உன்னையும் அழைத்துப் போகலாம். ஆனால் எங்கள் வாகனங்கள் செல்லும் வேகத்திற்குச் சமமாக உன்னால் வர முடியுமா?'' என்று கேட்டான். அந்த ஜலராட்சஸனும், ''ஓ! என்னால் அவ்வாறு வர முடியும்,'' என்றான்.

சித்தசாதகன், ''பேஷ். எங்களுடன் வா!'' என்று கூறிக் கொண்டிருந்த போது அங்கு குள்ளர்களின் படைத் தலைவன் வீரர்கள் சிலருடன் வந்தான். அவனைக் கண்ட சித்தசாதகன், ''ஜல ராட்சஸர்களுடன் நீங்கள் சண்டை போட்டதை எல்லாம் நாங்கள் பார்த்தோம். பலர் காயப்பட்டுக் கிடக்கிறார்கள். அவர்களுக்கு மருத்துவ உதவி செய்வது மனிதாபிமானம் தானே!'' என்றான்.

சித்தசாதகனோ, ''மருத்துவ உதவியா? அவர்களை எமலோகத்திற்கு அனுப்பும் வழியைப் பார்!'' என்றான் சற்று கோபத்தோடு.

அப்போது அந்தப் படைத் தலைவன், ''அங்கே பாருங்கள்! காட்டிலிருந்து அடர்ந்த புகை எழும்பி வருகிறதே. காடே தீப்பற்றி எரிகிறதா?'' என்று கவலைப்பட்டவாறே கூறினான்.

அப்போது சித்த சாதகன், ''இது எப்படி ஏற்பட்டது என்று தெரியவில்லையே! மகரகேது, உன் மர்மக்குள மகேஸ்வரரும் அரசகுமாரனும் அரசகுமாரியும் அங்கே தான் விழுந்தார்கள். உன் மர்மக்குள மகேஸ்வரர் அந்தத் தீயில் அகப்பட்டு வெந்து சாம்பலாகிவிடக் கூடாது என்று கடவுளை வேண்டிக் கொள். புறப்படு, இப்போதே நாம் அந்த இடத்திற்குப் போய்ச் சேர வேண்டும்,'' என்று கூறி அவசரப்படுத்தினான்.

மறுவிநாடியே மகரகேதுவும் சித்தசாதகனும் தம் வாகனங்களின் மீது அமர்ந்து செல்ல, ஜல ராட்சஸனும் அவர்களின் பின்னாலேயே சென்றான். *(தொடரும்)*



நவீன
வேதாளக்
கதை

# மாறுபட்ட அறிவுரைகள்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் அங்கு தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மாயானத்தை நோக்சி செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து, ''மன்னனே! இந்த பயங்கர நள்ளிரவில் நீ சற்றும் பயப்படாமல் இப்படி ஒரு முயற்சியில் இறங்கி இருக்கிறாயே. இது நீயாக யோசித்துச் செய்வதா அல்லது யாராவது கூறிய அறிவுரைகளின் படிச் செய்வதா? சில சமயங்களில் அறிவுரைகள் ஒன்றுக்குமற்றது நேர் எதிராக



யும் பாரட்டப் பலர் இருப்பார்கள். ஆனால் உன் தவறுகளை உன்னிடம் கூற எல்லோருமே தயங்குவார்கள். நான் உன் தந்தை. அதனால் தயங்காமல் உன் தவறுகளைக் கூறுகிறேன். நீ அவை பற்றி யோசித்து திருத்திக் கொள்!'' என்று கூறி வந்தான்.

இப்படியே சில நாட்கள் கழிந்தன. ஒரு நாள் பராக்கிரமசிம்மன் நோய்வாய்ப்பட்டு படுத்துவிட்டான். நாளுக்கு நாள் அது தீவிரமாகவே, அரசாங்க வைத்தியர் அவனிடம், ''அரசே! நீங்கள் மூன்று மாத காலத்திற்கு ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள். அப்போதுதான் நீங்கள் குணமடைவீர்கள்,'' என்றார். அதனால் மன்னன் தன் மகன் வீரசிம்மனை அழைத்து ''வைத்தியர் என்னை மூன்று மாதங்களுக்கு ஓய்வு எடுத்துக் கொள்ளச் சொல்லி இருக்கிறார். அதனால் நீ மூன்று மாதங்களுக்கு ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொள்!'' என்றான்.

வீரசிம்மனோ, ''நான் தான் தவறுகளையே செய்பவன் ஆயிற்றே. அதனால் தவறுகள் செய்யாத ஒருவனிடம் இந்தப் பொறுப்பை ஒப்படையுங்கள்!'' என்று கோபமாகக் கூறவே, மன்னனும், ''மகனே! நீ இளவரசன். திறமைசாலி. எனவே உன்னை விட்டுவிட்டு இந்தப் பொறுப்பை வேறு யாருக்குக் கொடுக்க முடியும்? நீதான் ஏற்கவேண்டும்,'' என்றான்.

தன் தந்தை தன்னைப் பாராட்டியதைக் கேட்ட வீரசிம்மன் மகிழ்ந்தான். உடனே அவன், ''தந்தையே! இந்தப் பொறுப்பை ஒரு நிபந்தனை

இருக்கும். இதை விளக்க உனக்கு பராக்கிரமசிம்மன் என்ற மன்னனைப் பற்றிக் கூறுகிறேன். கவனமாகக் கேள்!'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

பர்வதபுரத்தை பராக்கிரம சிம்மன் என்ற மன்னன் நன்கு ஆண்டு வந்தான். அவனது மகன் வீரசிம்மன். மன்னன் தன் மகனிடம் எப்போது பார்த்தாலும் அவன் செய்யும் தவறுகளையே கூறி வரலானான். நன்கு படித்தவனான வீரசிம்மனுக்கு இது மிகவும் வருத்தத்தைத் தந்தது. அதனால் அவன் தன் தந்தையிடம் தினமும், ''என்னப்பா இது! நான் செய்வது எல்லாமே தவறுகள் தானா? ஒன்று கூடச் சரியானது இல்லையா?'' என்று கேட்டு வந்தான்.

அவனது தந்தையும், ''நீ அரசகுமாரன். உன் ஒவ்வொரு செயலை

யின் பேரில் ஏற்கிறேன். இந்த மூன்று மாத காலத்தில் ஒரு சிறு தவறு நேர்ந்துவிட்டால் நான் பொறுப்பை விடுவதோடு எதிர்காலத்தில் இந்த நாட்டின் மன்னனாகவும் ஆக மாட்டேன்,'' என்றான்.

மன்னனும் அந்த நிபந்தனையை ஏற்பது பற்றி யோசித்தான். அவன் உடனே ஆஸ்தான புரோகிதரும் பண்டிதருமான விவேகசூடரைக் கலந்து ஆலோசிக்கவே, அவரும் ''வீரசிம்மன் தவறு செய்யாமல் ஆட்சி புரிவான் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. நீங்கள் மட்டும் அவன் தவறு செய்வதாகக் இனி கூறாதீர்கள்,'' என்று அறிவுறுத்தினார்.

மன்னனும், ''அவன் தவறுகளைச் செய்பவன் ஆயிற்றே. என்னால் அதைச் சொல்லாமல் இருக்க முடியாதே!'' எனவே, அவரும் ''கவலை வேண்டாம். இதனால் ஆட்சி புரிய அனுபவம் கிடைக்கும். நீர் தினமும் கண்ணை மூடிக் கொண்டு தியானத்தில் இரும்!'' என்றார்.

அந்த அறிவுரையை ஏற்று மன்னனும் வீரசிம்மனின் நிபந்தனையை ஏற்று ஆட்சிப் பொறுப்பை அவனிடம் ஒப்படைத்தான். வீரசிம்மனும் தினமும் இரவில் தன் தந்தையிடம் அன்று நடந்தவற்றைக் கூற, பராக்கிரமசிம்மனும் எல்லாம் சரியாகவே இருக்கிறது என்று கூறி வந்தான்.

இப்படியே மூன்று மாதங்கள் கழிந்தன. வீரசிம்மன் நன்கு திறன்பட ஆட்சிபுரிபவன் என்ற பெயரும் பெற்றுவிட்டான். அப்போது பராக்கிரமசிம்மன் தன் மகனை மன்னனாக்கிவிட்டு தான் ஓய்வு எடுத்துக் கொள்ளத் தீர்மானித்தான். அதனால் வீரசிம்மனுக்குப் பட்டாபிஷேகம் நடந்தது. அவன் நாட்டின் மன்னனாகிவிட்டான். இதன்பின் இரண்டு வருடங்கள் கழிந்தன. யாவரும் வீரசிம்மனைப் பாராட்டினார்களேயொழிய யாருமே ஒரு தவறைக்கூடச் சுட்டி காட்டவில்லை.



ஆனால் வீரசிம்மன் மனதில் மட்டும் நாட்டில் ஆங்காங்கே சிறுசிறு தவறுகள் நடந்து கொண்டிருக்கின்றன என்ற சந்தேகம் எழுந்தது. அவன் அமைச்சர்களிடமும் படைத்தலைவர்களிடமும் அதிகாரிகளிடமும் பல பிரமுகர்களிடமும் அதை பற்றிக் கேட்டும் யாவரும் ஒரு தவறும் நடக்கவில்லை என்றே கூறினார்கள்.

வீரசிம்மன் தன் தந்தையிடமே



மன் அரசாங்கப் பண்டிதரைக் கண்டு தன் பிரச்சினையைக் கூறினான்.

அவரும், ''எவன் தன் தவறு களைத் தெரிந்து கொண்டு அவற் றைத் திருத்திக் கொள்கிறானோ அவன் வாழ்க்கையில் முன்னேறு வான். இப்போது உன் அறிவு முன் போல் அல்லாமல் நல்ல முதிர்ச்சி அடைந்துவிட்டது. ஆனால் நீ மன்ன னாகிவிட்டதால் யாரும் உன் தவறைச் சொல்ல பயப்படுகிறார்கள். இப் போதும் உன் தந்தையால் தான் சற்றும் பயமில்லாமல் உன் தவறுகளைச் சுட்டிக்காட்ட முடியும். இதற்கு ஒரே வழி, நீ அவருக்கு உன் மீது கோபம் வரும்படிச் செய்ய வேண்டும்,'' என்றார்.

அவனும் அது பற்றித் தாயிடம் யோசனை கேட்க அவளும், ''நீ உன் தந்தை எதைச் சொன்னாலும் அதை எதிர்த்து அதற்கு நேர்மாறாகக் கூறு. நாட்டின் எந்தக் கொடிய நிகழ்ச்சி நிகழ்ந்தாலும் அதற்குக் காரணம் அவரது முன்னோர்களின் செயல்களே என்று கூறு. அப்போதுதான் அவ ருக்குக் கோபம் வரும்,'' என்றாள்.

வீரசிம்மனும் தன் தாயார் கூறியது போல நடக்கவே பராக்கிரமசிம்ம னால் பொறுமையாக இருக்க முடிய வில்லை. அவன் அரசாங்க பண்டித ரைக் கண்டு, ''குருவே! அரண்மனை யில் இருந்து கொண்டு என்னால் கோபத்தை அடக்கிக் கொள்ள முடிய வில்லை. என் மகன் இப்போது நல்ல விதமாக ஆட்சிபுரிகிறான். எனவே நான் காட்டிற்கு போய் தவம் புரி கிறேன்,'' என்றான்.

போய், ''நான் முன்பு அகந்தை யால் நிபந்தனை விதித்து ஆட்சிப் பொறுப்பை ஏற்றேன். அது எவ் வளவு தவறு என்று இப்போது தெரி கிறது. யாருமே என் ஆட்சியின் தவறு களைக் கூறுவதே இல்லை. அதனால் நீங்கள் முன்போல என் தவறுகளைச் சுட்டிக் காட்டுங்கள். அப்போது தான் என்னால் தவறுகளைத் திருத்த முடியும். மக்களுக்கு நல்லாட்சியைத் தர முடியும்,'' என்று வேண்டினான்.

அப்போது பராக்கிரசிம்மன், ''மகனே! முன்பு சற்றும் தயங்காமல் நான் உன் தவறுகளைக் கூறினேன். இன்றோ உன் திறமை எவ்வளவு என்று காட்டிவிட்டாய். இப்போது எங்கும் எந்தத் தவறும் இல்லை. எல்லாம் சரியாகவே உள்ளது. இது முற்றிலும் உண்மையே!'' என்றான். அதனால் திருப்தியடையாத வீரசிம்

அரசாங்க பண்டிதரும் ''மன்னா! இப்போது நீ தவம் புரியச் செல்வது சரியல்ல. இனி நீ உன் கோபத்தை அடக்கவும் வேண்டாம். எப்போதும் போல அரண்மனையில் இருந்து உன் மகனின் தவறுகளைச் சுட்டிக் காட்டி வா!'' என்றார்.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி, ''மன்னா! பராக்கிரமசிம்மனுக்குப் பண்டிதர் கூறிய இரு அறிவுரைகள் நேர்மாறாகத்தானே உள்ளன. முதலாவது அறிவுரை மன்னன் தன் மகனின் தவறுகளைக் கூறக் கூடாது என்பது. இரண்டாவது அறிவுரையோ தவறுகளை எடுத்துக் கூறு என்பது. இப்படி அவர் கூறியது ஏன்? இதற்குச் சரியான விடை தெரிந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகிவிடும்,'' என்றது.

விக்கிரமனும், ''முன்பு வீரசிம்மன் தவறுகள் மட்டுமே செய்வதாகப் பராக்கிரமசிம்மன் கூறியபோது அவனுக்கு ஆட்சிபுரிவதில் போதிய அனுபவம் இருக்கவில்லை. அவன் தவறு புரியவில்லை எனக் கூறி ஆட்சிபுரிய அனுமதித்தபோது அவன் நல்ல அனுபவம் பெற்றுத் திறன்பட ஆட்சியும் புரிந்தான். நல்லாட்சியிலும் சிறுசிறு தவறுகள் ஏற்படலாம். அவற்றை அறிந்து திருத்த மன்னனுக்கு வாய்ப்பு அளிக்க வேண்டும். வேறு யாரும் சொல்லமாட்டார்கள். மன்னனுக்கு மரியாதை காட்டுவதாக எண்ணிக் கொண்டு அவன் செய்வது எல்லாம் மிகவும் சரியே என்று தான் சொல்லிக் கொண்டே இருப்பார்கள். ஆனால் பராக்கிரமசிம்மன் அப்படிச் செய்ய வேண்டியதே இல்லை. மன்னன் வீரசிம்மன் அவனது மகன். ஒரு தந்தை மகனுக்கு அறிவுரை கூற முடியுமே! அதை பயம் இல்லாமல் செய்பவன் மன்னனின் தந்தையே. எனவே நாட்டின் நலனைக் கொண்டு காலத்திற்கு ஏற்ப பண்டிதர் அறிவுரை வழங்கினார். அவர் இரு நேர்மாறான அறிவுரைகளை வழங்கியது சரியே!'' என்றது.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப்போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# இளம் வயதினனின் தீர்ப்பு

காசி மன்னன் இறந்தபோது அவனது மகனின் வயது ஏழே. அந்த மன்னனிடம் வேலை பார்த்து வந்த சந்தன் என்பவன் இனி தனக்கு யாரும் வேலை கொடுக்கமாட்டார்கள் என்று எண்ணித் தன் ஊருக்குப் போய் விட்டான். அங்கு அவன் தன் சிறு நிலத்தில் விவசாயம் செய்து சந்தோஷமாக வாழ்ந்து வந்தான். அவன் நல்லவன். பொய்யே பேசாதவன். அதனால் அந்த ஊரார் அவனை மிகவும் விரும்பினார்கள்.

ஒரு நாள் அவனது எருதுகள் நோய் வாய்ப்பட்டுவிட்டன. அதனால் அன்று வயலில் வேலை செய்ய ஜகன் என்ற தன் அண்டை வீட்டுக்காரனிடம் அவனது எருதுகளை இரவலாகக் கொடுக்கும்படிக் கேட்டான். அவனும் அதற்கு வாடகையாக ஒருபடி அரிசி வாங்கிக் கொண்டு தன் இரு எருதுகளைக் கொடுத்தான். தன் வயலில் வேலை முடிந்ததும் அன்று மாலையிலேயே சந்தன் தான் இரவல் வாங்கிய எருதுகளோடு ஜகனின் வீட்டிற்குச் சென்றான்.

அப்போது ஜகன் படுத்து கண்ணை மூடிக் கொண்டிருந்தான். அதைக் கண்ட சந்தன் அவன் தூங்கிக் கொண்டிருப்பதால் அவனை எழுப்பித் தொந்தரவு கொடுக்க வேண்டாம் என்று எண்ணி எருதுகளை ஜகனின் தொழுவத்தில் கட்டிவிட்டுச் சென்றான். ஜகனும் அதைப் பார்த்தவாறேதான் படுத்திருந்தான். ஆனால் அன்றிரவே யாரோ ஜகனின் எருதுகளைத் திருடிக் கொண்டு போய்



விட்டார்கள். அந்த விஷயத்தைக் காவலதிகாரியிடம் புகார் செய்ய லாமா என்று முதலில் அவன் நினைத் தான். ஆனால் மறுநிமிடமே அவ னுக்கு ஒரு அபூர்வ யோசனை தோன்றியது. அதனால் அவன் புகார் செய்யவில்லை.

மறுநாளும் சந்தன் ஜகனிடம் எருதுகளை இரவல் கேட்க வந்தான். அப்போது ஜகன், ''நேற்று நீ ஓட்டிக் கொண்டு போன எருதுகளை நீ என்னிடம் ஒப்படைக்காமல் மறு படியும் கேட்டால் நான் எப்படிக் கொடுக்க முடியும்?'' என்று அப்பாவி போலக் கேட்டான்.



சந்தனோ, ''நேற்று மாலையே நான் உன் எருதுகளை உன் தொழுவத் தில் கட்டிவிட்டுப் போனேனே. அப் போது நீ தூங்கிக்கொண்டிருந்தாய்,'' என்றான். ஜகனோ, ''நீ பொய் சொல் கிறாய். என் எருதுகளை யாருக்கோ விற்றுவிட்டாயா? ஒன்று எனக்கு அந்தப் பணத்தைக் கொடு அல்லது என் எருதுகளைக் கொடு!'' என்றான்.

சந்தன் தான் எருதுகளை அவன் தொழுவத்தில்தான் கட்டிவிட்டுப் போனதாக மறுபடியும் கூறவே, ஜகன் இல்லவே இல்லை என்று கூறி ஊர்ப் பஞ்சாயத்திடம் புகார் கொடுத்தான். ஆனால் பஞ்சாயத்து தீர்ப்புக் கூற விரும்பாமல் விஷ யத்தை மன்னரிடம் கூறுவது என முடிவு செய்தது. ஏனெனில் அது சந்தன் சொல்வது உண்மையே என நம்பியது. அதனால் சந்தனும் ஜக னும் தலைநகருக்குச் சென்றார்கள்.

வழியில் சில சிறுவர்கள் அவர்கள் மன்னனைக் காணப் போவதை அறிந்து, ''எங்களது பிரச்சினையை மன்னரிடம் கூறி அதற்கு என்ன தீர்வு என்று கேட்டு வாருங்கள். நாங்கள் முன்பெல்லாம் அதிகாலையில் எழுந்து கொண்டிருந்தோம். இப் போது அப்படி எழுந்திருக்க முடிய வில்லை. இது ஏன் என்று கேளுங் கள்,'' என்றார்கள்.

ஜகனோ கேட்க முடியாது என் றான். சந்தனோ தான் அதை மன்ன னிடம் கூறி அதற்கு என்ன காரணம் என்ன என்று கேட்டு அவர் கூறு வதைச் சொல்வதாகக் கூறிவிட்டு அரச சபைக்குச் சென்றான். இளம் வயதின னான காசி மன்னன் பழைய வேலை யாளான சந்தனை அடையாளம் கண்டு கொண்டான். ஜகனிடம் மன் னன் புகாரை கூறும்படிச் சொல்லவே

அவனுக்கு உதறல் கண்டது. ஏனெனில் மன்னன் சந்தனை நன்கு அறிந்தவன். அவன் பொய் சொல்ல மாட்டான் என்றும் தான் சொல்வது பொய் எனக் கண்டு பிடித்துவிடுவான் என்று எண்ணியே அவன் பயந்தான்.

மன்னன் அவனிடம், ''சந்தன் இரவாகியும் உன் எருதுகளைக் கொண்டு வரவில்லை என்றால் நீ போய் ஏன் கேட்கவில்லை? இதனால் அவன் உன் தொழுவத்தில் எருதுகளைக் கொண்டு வந்து கட்டியபோது நீ படுத்தவாறே அதைப் பார்த்தாய் என்பது தெளிவாகிறது, பொய் கூறிய தால் உன் கண்களைப் பிடுங்கி எறிவது தான் சரி!'' என்றான்.

அதைக் கேட்ட ஜகன் பயந்து நடுங்கி, ''அப்படிச் செய்யாதீர்கள். சந்தன் என் எருதுகளை தொழுவத்தில் கட்டிவிட்டுப் போனதை நான் பார்த்தேன்,'' என்று சொன்னான். அப்போது மன்னன், ''சந்தன்! உன்னைப் பற்றி எனக்குத் தெரியும். உனக்கு என்ன வேண்டும். கேள்!'' எனவே, அவனும் வழியில் கண்ட சிறுவர்களின் பிரச்சினையைக் கூறி அதற்குத் தீர்வு கூறும்படி வேண்டினான்.

மன்னனும், ''அச்சிறுவர்கள் முன்பு தினமும் அதிகாலையில் ஒரு காகம் கரைவதைக் கேட்டு விழித்து எழுந்தார்கள். ஆனால் இப்போது அந்தக் காகம் கரையாததால் அவர்களால் அதிகாலையில் எழ முடியவில்லை. அந்தக் காகம் இறந்து போயிருக்கும். அதனால்தான் அந்த குறிப்பிட்ட வேளையில் வந்து கத்தவில்லை,'' என்றான்.

இதைக் கேட்ட சபையோர்கள் ஆச்சரியப்பட்டார்கள். சந்தனும் மன்னனை வணங்கி விடைபெற்றுக் கொண்டு அங்கிருந்து சென்றான். வழியில் தான் முன்பு கண்ட சிறுவர்களிடம் மன்னன் கூறிய காரணத்தைக் கூறவே, அவர்களும் ''ஆமாம். அவர் கூறியதுபோல இப்போது காகம் கரையவில்லை தான்,'' என்றார்கள்.

இப்படித் தீர்ப்புகளைக் கூறிய இளம் வயது மன்னன் வேறுயாருமே இல்லை. புத்தரின் மறுபிறப்பான போதிசத்வரேதான்!





# உண்மை நிலையை உணர்!

மாணிக்கத்தின் இரண்டு மகன்கள் குப்பனும் சுப்பனும் ஆவர். குப்பன் குடும்ப நிர்வாகத்தில் எல்லா விதத்திலும் தன் தந்தைக்கு உதவி வந்தான். சுப்பனோ ஒரு வேலையும் செய்யாமல் சாப்பிட்டு ஊர் சுற்றி வந்தான்.

ஒரு நாள் சுப்பனை மாணிக்கம் கூப்பிட்டு, ''நீ உன் மனதில் பெரிய ஜமீன்தாரர் என எண்ணிக் கொண்டு இருக்கிறாயா? ஜமீன்தாரர் கூட சுற்றி அலைந்தே தம் ஜமீனை நிர்வகிக்கிறார். இதோ பார்! நீ உன் அண்ணனோடு சேர்ந்து எல்லா வேலைகளையும் செய்வதனால் இங்கே இரு. இல்லாவிட்டால் வீட்டைவிட்டே போய்விடு!'' என்று சற்றுக் கடுமையாகவே கூறினான்.

அவனது தாயாரும் அண்ணனும் கூட அவனிடம் வீட்டிற்கு ஏதாவது ஒரு வேலையையாவது செய்யும்படிச் சொன்னார்கள். இதைக் கேட்ட சுப்பனுக்குக் கோபம் வந்தது. அவன் வீட்டைவிட்டு வேகமாக வெளியே போய்விட்டான்.

நேராக அவன் அவ்வூர்க் கோவில் மண்டபத்திற்குப்போய் உட்கார நினைத்தபோது அங்கு ஒரு சன்னியாசியைக் கண்டான். அவன் மீது எரிச்சல் கொண்டு, ''நான் ஒரு வேலையும் செய்யாமல் சாப்பிட்டுவிட்டு வீட்டில் இருப்பதால் என்னை எல்லோரும் ஜமீன்தாரர் என்று கேலி செய்கிறார்கள். நீயும் ஒரு வேலையும் செய்யாமல் காவி உடை அணிந்து சன்னியாசியாகிவிட்டாயா?'' என்று கேட்டான்.

அவன் ஏதோ கோபத்தில் இருக்

- கி. அருணா -

கிறான் என்று புரிந்து கொண்ட சன்னியாசி ''ஜமீன்தாரர் எப்போதுமே ஜமீன்தாரர்தான். அதுபோல சன்னியாசியும் சன்னியாசிதான். யாரானாலும் திருப்தியுடன் வாழ வேண்டும். ஜமீன்தாரர் என்று சொல்லிவிட்டால் ஒருவன் ஜமீன்தாரராகி விடமாட்டான். ஜமீன்தர்ரர் போல ஒருவன் வேஷம் போட்டாலும் அவன் ஜமீன்தாரராகிவிட மாட்டான். அவன் ஏழைதான். நீ என்னோடு இரண்டு நாட்கள் இரு. அப்போது நான் சொன்னது உனக்குப் புரியும்,'' என்று கூறி விட்டுக் கிளம்பினார்.

சுப்பனும், ''சரி, உன்னோடு வருகிறேன்,'' என்று கூறி அவர் பின்னாலேயே சென்றான். சற்று நேரத்தில் இருவரும் அடுத்த ஊரை அடைந்தார்கள். அங்கு அந்த ஊர்க் காளியம்மன் திருவிழா நடந்து கொண்டிருந்தது. மயிலாட்டம், ஒயிலாட்டம், கரகாட்டம் என்று பலர் வேடங்களை அணிந்து ஆடிக் கொண்டிருந்தார்கள்.

அந்தத் திருவிழாவில் அந்த கிராமத்துவாசி ஒருவன் ஜமீன்தாரரைப் போல வேஷம் போட்டுக் கொண்டு யானை மீது அமர்ந்து வருவது சிறப்பு நிகழ்ச்சி. மக்கள் அந்த வேஷம் போட்டுக் கொண்டு வருபவனை உண்மையான ஜமீன்தாரராக மதித்து மரியாதை செலுத்துவது வழக்கம்.

சன்னியாசி சுப்பனுக்கு யானை மீது அமர்ந்து வரும் வேஷக்காரனைச் சுட்டிக் காட்டி, ''அவனது மிடுக்கைப் பார். இப்போது ஜமீன்தாரர் போல மகிழ்ச்சியுடன் இருக்கிறான். சற்று நேரம் கழித்து அவன் எப்படி இருக்கிறான் என்பதையும் பார்!'' என்றார்.

அப்போது அங்கிருந்த ஒருவன் அவர்களிடம், ''இப்போதுள்ள ஜமீன்தாரரின் முப்பாட்டனார் பரம ஏழையாக இருந்தவர். அவர் நாக்கில் ஊசி





குத்தி அம்மனுக்கு வேண்டுதல் செலுத்தியதாலே தான் இந்த ஜமீன் அவருக்குக் கிடைத்தது. அவருக்குப் பின் வந்தவர்கள் அந்த வேண்டுதலை வழக்கமாகக் காட்ட இந்த ஊரில் யாராவது ஒருவனைப் பிடித்து ஜமீன் தாரர் வேஷம் போடவைத்து யானை மீது உட்காரவைத்து ஊர்வலம் நடத் தப்படுகிறது,'' என்றான்.

சுப்பனும், ''இதில் தவறு எதுவும் இல்லையே. பணம் கிடைப்பதா னால் எந்த வேஷமும் போடலாம்,'' என்றான். அதுகேட்டு சன்னியாசி சிரித்து ''இந்தத் திருவிழா முடிந்ததும் நாளைக்கு நாம் இந்த ஜமீன்தாரர் வேஷம் போட்டவனின் வீட்டிற்குப் போய் அவனைப் பார்ப்போம்,'' என்றார். சுப்பனும் 'சரி' என்றான்.

யானை ஊர்வலம் அம்மன் கோயிலை அடைந்தது. யானை மீது இருந்த ஜமீன்தார வேஷக்காரன் கீழே இறங்கி அந்த வேஷத்தைக் கலைத்து விட்டு மற்றவர்களுடன் சேர்ந்து மேளதாளத்திற்கு ஏற்ப ஆடலானான். முடிவில் பூசாரி ஜமீன்தாரர் வேஷதாரி ஜமீன்தாரருக்குக் கொடுக் கச் சொல்லி அனுப்பிய பணத்தையும் பரிசுகளையும் ஒரு தட்டில் வைத்து அவனுக்குக் கொடுத்தார்.

மறுநாள் சன்னியாசியும் சுப்பனும் ஜமீன்தாரர் வேஷத்தைப் போட்டுக் கொண்டவனின் வீட்டிற்குச் சென் றார்கள். அது ஒரு ஓலைக் குடிசை. அவன் பெயர் முத்தைய்யன். தினக் கூலி வேலை செய்பவன். அவனது தாய் தந்தையர் கூடைபாய் முதலிய வற்றைப் பின்னித் தயாரிப்பவர்கள்.

முத்தைய்யனின் மனைவியும் காய்கறி பயிரிட்டு அவற்றை விற்று வந்தாள். முத்தைய்யன் தன் வீடு தேடி

வந்த சன்னியாசியையும் சுப்பனை யும் வரவேற்று குடிக்க நீர்மோர் கொடுத்து உபசரித்தான். அக்குடும் பத்தவர் பணம் சம்பாதிக்கத் தாங்கள் எப்படி எல்லாம் சிரமப்பட வேண்டி யுள்ளது என்பதை அவர்களிடம் கூறி னார்கள்.

முத்தைய்னும், ''இந்த வேஷம் நான் ஏன் போட்டேன் தெரியுமா? இந்த ஜமீன்தாரரும் இவரது முன் னோர்களும் என் குலத்தையே சேர்ந்த வர்கள். இவரது முன்னோரில் ஒருவர் இந்த ஊர் அம்மனை வேண்டிக் கொண்டதாலேயே ஜமீன்தாரர் ஆனார். அதனால் எனக்கும் ஜமீன் தாரர் ஆக வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. அதற்கு வழி நான் ஜமீன் தாரர் வேஷம் போட்டு நாக்கில் ஊசியைக் குத்திக்கொண்டு பிரார்த் தனை செலுத்துவதுதான். இந்தத் திருவிழாவின் போது வாய்ப்பு கிடைக்கிறது. நாக்கில் ஊசியைக் குத்தும்போது வலிக்கத்தான் செய் யும். இதற்கு பணம் கிடைக்கிறது. எனக்கு குடும்பத்தை நடத்த முடி கிறது,'' என்றான்.

அப்போது சுப்பனுக்குத் தன் குடும்பத்தினரைப் பற்றிய நினைவு வந்தது. சன்னியாசியும் சுப்பனும் முத்தையனிடம் விடை பெற்றுக் கொண்டு ஊருக்குத் திரும்பி வந் தார்கள். சுப்பனின் மனம் அலை மோதியது. அப்போதுதான் அவன் தன் குடும்பத்தின் உண்மை நிலையை உணர்ந்தான். அவன் தன் வீட்டை அடைந்தபோது அவனது தாய் தந்தையும் அண்ணனும், ''என் னடா சுப்பா! இவர் ஏதோ சொல்லி விட்டார் என்பதற்காக இப்படியா கோபித்துக்கொண்டு போவது? நீ ஒரு வேலையும் செய்ய வேண்டாம். எங்களை விட்டுப் போய்விடாதே!'' என்று கூறிக் கண்ணீர் வடித்தார்கள்.

சுப்பனோ, ''இனி நான் எங்கும் போக மாட்டேன். அண்ணனோடு சேர்ந்து எல்லா வேலைகளையும் இனிமேல் செய்யத்தான் போகி றேன்'' என்றான் பெருமையுடன்.





# ஓட்டைப் பை!

ராமானந்தரின் குருகுலம் புகழ் பெற்றது. அவர் மாணவர்களைக் கஷ்டப் படுத்தாமல் எளிய முறையில் கற்றுக் கொடுத்து வந்ததே அதற்குக் காரணம்.

அக்குருகுலத்தில் தன் மகன் சந்திரனை சோமன் என்ற குடியானவன் சேர்க்கக் கூட்டி வந்தான். ராமானந்தரும் அவனிடம் சில கேள்விகளைக் கேட்டுவிட்டு குருகுலத்தில் சேர்த்துக் கொண்டார்.

ஆனால் ஒரு சில நாட்களுள் சந்திரன் மற்ற மாணவர்கள் போல இல்லை என்பதை ராமானந்தர் தெரிந்து கொண்டுவிட்டார். அவன் வகுப்பில் சொல்லிக் கொடுப்பதை கவனித்துக் கேட்பதே இல்லை. பாடப் புத்தகங்களை அவ்வப்போது தொலைத்தான். தேகப் பயிற்சி செய்ய அந்தக் கூடத்திற்கும் செல்லவில்லை. ஆனால் சாப்பிட மட்டும் எல்லோருக்கும் முன்னதாகப் போய் வந்தான். அதனால் அவனது உடல் பருத்து விட்டது. அறிவு மட்டும் வளரவில்லை. ராமானந்தர் பல முறைகள் சொல்லிப் பார்த்தும் படிப்பில் அவன் கவனம் செலுத்தவே இல்லை. அதனால் அவனைத் திருத்தவே முடியாது என்ற முடிவுக்கு ராமானந்தர் வந்துவிட்டார்.

இச்சமயத்தில் வேறொரு ஊரில் குருகுலம் நடத்தி வரும் முதியவரான ஞானானந்தர் ராமானந்தரைக் காண அவரது குருகுலத்திற்கு வந்தார். அப்போது ராமானந்தர் அவரிடம் சந்திரனைப் பற்றிக் கூறினார். அதைக் கேட்ட ஞானானந்தர், ''இப்படிப்பட்டவர்களை வேறு முறைகளைக் கையாண்டு திருத்த முடியும். முதலில் அவனிடமுள்ள குறையை அவனே அறிந்து கொள்ளும்படிச் செய்ய வேண்டும். புத்தகப் படிப்போடு அனுபவங்கள் வாயிலாகவும் சொல்லிக் கொடுக்கலாம்,'' என்று கூறி ஒரு வழியையும் ராமானந்தரிடம் கூறினார். அதன் பிறகு அவர்

- பாபநாசம் சாமா -

தமது ஊருக்குச் சென்றுவிட்டார். மறுநாள் ராமானந்தர் சந்திரனை அழைத்து, ''நேற்று வந்த முதியவர் ஞானானந்தர் போரூரில் குருகுலம் நடத்தி வருகிறார். நம் குருகுலத்தில் இல்லாத சில புத்தகங்கள் தம்மிடம் இருப்பதாக அவர் கூறினார். நீ பொடி நடையாக அந்த ஊருக்குப் போய் அவற்றை வாங்கி வந்துவிடலாம். வழியில் நீ ஏதாவது வாங்கிச் சாப்பிட இந்தப் பையில் பணம் போட்டு வைத்திருக்கிறேன்,'' என்று கூறி ஒரு பையைக் கொடுத்து அவனைப் போரூருக்கு அனுப்பினார்.

குரு தன்னிடம் ஒரு வேலையை ஒப்படைத்ததற்கு சந்திரன் மகிழ்ந்து போனான். அவன் ராமானந்தர் கொடுத்த பையைத் தோளில் தொங்க விட்டுக் கொண்டு போரூருக்குப் போகலானான். வழியில் ஒரு சிறு கிராமத்தில் சந்தை கூடி இருக்கவே அவன் அங்கிருந்த ஒரு பட்சணக் கடையைப் பார்த்தான்.

அதிலிருந்து ஏதாவது வாங்கித் தின்னலாம் என்று எண்ணி காசு எடுக்க குருகொடுத்த பைக்குள் கையைவிட்டான். ஆனால் அதில் எதுவும் இருக்கவில்லை. பையை எடுத்து நன்கு பார்த்தான். அதில் ஒரு பெரிய ஓட்டை இருந்தது கண்டு திகைத்து நின்றான்.

அப்போது அந்தக் கடையில் இருந்த ஒருவன் சந்திரனைப் பார்த்து, ''என்ன தம்பீ! இந்த ஓட்டைப் பையில் பணம் இருந்ததா? அது வழியில்தான் எங்காவது விழுந்திருக்கும்.



வந்த வழியிலே போய்ப் பார்!'' என்றான்.

சந்திரனோ திரும்பிப் போய்ப் பணத்தைத் தேட விரும்பவில்லை. காரணம் அவனது பருமனான உடலும் சோம்பலுமே. அவன் என்ன செய்வது என்று யோசித்தவாறே சந்தையைக் கடந்து சென்றான்.

அப்போது ஒரு பிச்சைக்காரன் அவனைப் பின் தொடர்ந்து தனக்கு ஏதாவது பிச்சை போடும்படி நச்சரிக்கலானான். அவனோ தன்னிடம் ஏதுவும் இல்லை என்று பையைத் திருப்பிக் காட்டிவிட்டு அதை மீண்டும் தோளில் போட்டுக் கொண்டு நடந்தான்.

அவன் கொஞ்சதூரம் போனதும் ஒரு முரடன் மரத்திலிருந்து குதித்து கத்தியைக் காட்டி, ''உம், பையில் இருப்பதை எல்லாம் கொடு!'' என்று மிரட்டினான். சந்திரன் பயந்து போய் தன்னிடம் எதுவும் இல்லை என்று ஓட்டைப் பையைக் காட்டினான்.

முரடனும், ''பூ! ஓட்டைப் பையா! இதைத் தோளில் போட்டுக் கொண்டு திரிகிறாயே. பெரும் அறிஞன்தான் நீ!'' என்று கேலியாகச் சிரித்தவாறே சென்றான். சந்திரனும் சற்று நேரத்தில் போரூரை அடைந்து ஞானானந்தரின் குருகுலத்திற்குச் சென்றான். ஞானானந்தரும் அவனைப் பார்த்து ''ரொம்பவும் களைத்துப் போயிருக்கிறாயே, வழியில் எதுவும் சாப்பிடவில்லையா?'' என்று பரிவுடன் கேட்டார்.

சந்திரன் கண்ணீர் வடித்தவாறே



ஓட்டைப் பையைக் காட்டி வழியில் நடந்ததை எல்லாம் கூறினான். அப்போது அவர் அவனது முதுகைத் தட்டி, ''நீ உன் குருகுலத்திலிருந்து கிளம்புமுன் அவர் கொடுத்த பையை நன்கு பார்த்திருக்க வேண்டும். ஒரு வேளை அவர் பையில் போட்டுக் கொடுத்த பணம் ஓட்டை வழியாகப் பையிலிருந்து வழியில் விழுந்திருக்கலாம். நீ வந்த வழியில் திரும்பிப் போய் தேடிப் பார்த்திருக்கலாமே!'' என்றார்.

சந்திரனும், ''வழியில் ஒருவர் கூட இதையே சொன்னார். ஆனால் நான் மிகவும் களைத்துப் போய் விட்டதால் போகவில்லை,'' என்றான். அப்போது அவர், ''இதற்குக் காரணம் உன் பருமனான உடலே. நீ தினமும் தேகப் பயிற்சி செய்திருந்தால் பருமன் குறைந்திருக்கும். இனியாவது

தினமும் தேகப்பயிற்சி செய்!'' என்றார். சந்திரனும், ''தாங்கள் சொல்கிறபடியே செய்கிறேன்,'' என்றான்.

அப்போது ஞானானந்தர், ''இன்னொரு விஷயம். நீ ஒரு வருட காலமாக ராமானந்தரின் குருகுலத்தில் இருந்து வருகிறாயே. உன் அறிவு வளர்ந்ததாக தெரியவில்லையே. வழியிலேயே இது ஓட்டைப் பை என்று உனக்கு தெரிந்துவிட்டதே. உபயோகமில்லாத இதை நீ அப்போதே தூக்கி எறியாததால் தான் அந்த முரடன் உன் பையில் பணம் இருக்கிறது என்று எண்ணி மிரட்டினான். பையை நீ எறிந்திருந்தால் இந்த ஆபத்தைத் தவிர்த்திருக்கலாம்,'' என்றார்.

சந்திரனும், ''ஆமாம். அப்படிச் செய்திருக்கலாம். இது எனக்குத் தெரியவில்லையே,'' என்றான். ஞானானந்தரும், ''இவ்வளவுக்கும் காரணம் உன் அறியாமையே நீ மட்டும் உன் ஆசிரியர் கூறியதைக் கவனமாகக் கேட்டிருந்தால் உன் அறிவு வளர்ந்திருக்கும். அப்போது எதையும் யோசித்துப் பார்த்து செயல் புரிவாய். அனுமார் இலங்கைக்குப் போக ராமர் படகைக் கொடுத்து உதவவில்லை. அவரே யோசித்துத் தானே கடலைக் கடந்தார்,'' என்றார்.

அப்போது சந்திரனுக்குத் தன்னிடமுள்ள குறை நன்கு தெரிந்தது. அவன் ஞானானந்தர் கொடுத்த புத்தகங்களை எடுத்துக் கொண்டு வழி நடந்து ராமானந்தரின் குருகுலத்தை அடைந்தான்.

அவன் முற்றிலும் மாறி பாடங்களைக் கவனமாக கேட்பதையும் தினமும் தேகப் பயிற்சி கண்டு ராமானந்தர் மகிழ்ந்தார். இவ்வளவுக்கும் காரணம் ஞானானந்தர் கூறியபடி சந்திரனுக்குத் தாம் கொடுத்த ஓட்டைப் பை தான் என்பதை எண்ணி அவர் தன் மனதிற்குள் சிரித்துக் கொண்டார்.






# பட்டு நூல்காரர்!



பட்டு என்று கூறியதும் சட்டென உங்கள் நினைவிற்கு வருவது காஞ்சிபுரம், மைசூர், காசி, கஷ்மீர், மூர்ஷிதாபாத் ஆகிய இடங்களே. ஆனால் இந்த இடங்களில் எல்லாம் பட்டு நெசவை ஆரம்பிக்க வைத்தது குஜராத் மாநிலமே. தென்னிந்தியா மூர்ஷிதாபாத், காசி முதலிய இடங்களில் தற்போது வாழும் நெசவாளிகளை விசாரித்தால் அவர்கள் முன்னோர்கள் குஜராத்தின் சௌராஷ்டிரப் பகுதியில் இருந்தவர்கள் என்பது தெரியவரும். நான்காவது நூற்றாண்டில் அவர்கள் வசித்த நகரம் தீக்கு இரையானதால் அங்கிருந்த நெசவாளர்கள் தம் குடும்பத்தவருடன் இந்தியாவின் பல்வேறு பகுதிகளுக்குப் பிரிந்து சென்றார்கள். வேறு சில தகவல்களோ அவர்கள் எட்டாவது நூற்றாண்டிலேயே குஜராத்திலிருந்து வெளியேறி இந்தியாவின் மற்ற பகுதிகளுக்குச் சென்றதாகக் கூறுகின்றன. இவர்கள் தாம் பட்டு நூல்காரர்களாம்!

# அசையாத நிலை



ஒருவர் தம் கோரிக்கையைப் பிறர் ஏற்கும்படிச் செய்யக் கையாளப் படும் வழிதான் 'தர்னா'வும் 'கேரோ' என்பதும். 'தர்னா' என்றால் ஆணி அடித்தது போல ஓரிடத்தில் உட்கார்வது. 'கேரோ' என்பது ஒருவரைச் சூழ்ந்து கொண்டு அவரைச் செயல்பட விடாமல் தடுப்பது. இது இப்போது புதிதாகத் தோன்றியது என எண்ணிவிடாதீர்கள். பல நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்தே நம் நாட்டில் இவை கையாளப்பட்டு வருகின்றன. பழங்கால நூல்களில் 'கேரோ' ஆசரிதா என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அக்காலத்தில் பொதுமக்கள் மட்டும் அல்ல, அரசர்கள், அமைச்சர்கள், அரசாங்க அதிகாரிகள் என்போரும் 'தர்னா'வை நடத்தி தாம் விரும்பியவற்றை அடைந்திருக்கிறார்கள். தர்னா, கேரோ, உண்ணாவிரதம், தீக்குளித்தல் என்பன முன்பும் இருந்திருக்கின்றன.

# ஜார்கண்டு மாநில கிராமியக் கதை

ஜார்கண்ட் அண்மையில் அமைக்கப்பட்ட நம் நாட்டின் மாநிலம். பீகார் மாநிலத்தின் சோட்டா நாக்பூர் பீடபூமியையும் சந்தல் பர்கானாக்களையும் சேர்த்து 2000 நவம்பர் 15ல் இம்மாநிலம் உருவாக்கப்பட்டது. இதன் பரப்பளவு 79,714 ச.கி.மீ. 2001 மக்கள் தொகை கணக்குப்படி இங்கு 26,909428 பேர்கள் இருக்கிறார்கள. மக்கள் தொகை அடிப்படையில் மாநிலங்களில் இது பதிமூன்றாவது இடத்தில் உள்ளது.

ஜார்கண்டின் கிழக்கே மேற்கு வங்காளமும் மேற்கே சத்தீஸ்கடும், தெற்கே ஒரிசாவும், வடக்கே உத்தர் பிரதேஷும் பீகாரும் உள்ளன. லோஹார்தாகா மாவட்டத்தைத் தவிர மற்ற மாவட்டங்கள் மேற்குறிப்பிட்ட மாநில எல்லைகளைத் தொட்டே உள்ளன.

பீகார் மாநிலத்தின் கோடைகாலத் தலைநகராக ஒரு காலத்தில் இருந்த ராஞ்சி தற்போது இதன் தலைநகராக உள்ளது. ஹிந்தி, சந்தலி, உருது ஆகியவை இங்கு பேசப்படும் முக்கிய மொழிகள். இங்குள்ள மலைச் சாதியினரின் மொழிகள் முண்டரி, குருக் கோர்த்தா, நாகபுரியா, சத்ரி, கரியா, பஞ்ச பரகானியா, ஹோ, மால்டோ என்பனவாம்.

## சிங்கி போங்காவின் சிறப்புப் பரிசு

அகிலங்களை எல்லாம் படைக்கும் சிங்கிபோங்கா பூவுலகைப் படைக்க எண்ணினார். அதைப் படைத்த பின் ஆண்கள், பெண்கள், பறவைகள், மிருகங்கள் என்றெல்லாம் படைத்து மரங்களையும் வயல்களையும் அளித்தார். அத்துடன் சூரியனையும் கொடுத்தார். சிங்கி என்ற பெயரிலுள்ள சூரியன்தான் எல்லாவற்றிலும் முக்கியமானது. அது எல்லோருக்கும் வெப்பத்தையும் வெளிச்சத்தையும் கொடுத்து வந்தது.



அது மரம் செடி, கொடிகளை வளரச் செய்தது. மலர்களை விரித்து காய்களைப் பழுக்கச் செய்தது. வயல்களைப் பசுமையோடு இருக்கச் செய்து மழையையும் அளித்தது. எல்லோருக்கும் உணவு கிடைத்தது கண்டு சிங்கி போங்கா திருப்தி அடைந்து புன்னகை புரிந்தார்.

சூரியன் இரவு பகல் என்று இல்லாமல் எப்போதும் ஒளி அளித்தது. அதனால் மக்கள் களைத்துப் போகும் வரை வேலை செய்தார்கள். வேலை செய்யவோ அல்லது ஓய்வு எடுக்கவோ ஒரு குறிப்பிட்ட நேரம் என்று இருக்கவில்லை. வேலை, ஓய்வு, சாப்பாடு என்பது எல்லாம் அவரவர்கள் நினைத்த நேரத்தில் நடந்து வந்தன.

ஒருநாள் சிங்கிபோங்கா பூவுலகைப் பார்க்க வந்தார். அவர் வயலில் வேலை செய்து கொண்டிருந்த ஒருவனிடம், ''நீ எப்போது இந்த வயலை உழுதாய்?'' என்று கேட்டார். ''இன்று தான்!'' என்றான் அவன்.

இன்னொருவனிடம் ''அந்தப் பள்ளத்தை எப்போது தோண்டினாய்?'' என்று கேட்க, அவனும் ''இன்று தான்'' என்று பதில் சொன்னான். வேறொருவனிடம் ''நீ எப்போது பாத்தி கட்டினாய்?'' என்று கேட்க, அவனும் ''இன்றுதான்'' என்று பதில் அளித்தான். அவன் பக்கத்தில் நின்ற ஒருவன் ''ஏன் கேட்கிறீர்கள்? எல்லாமே இன்றுதான் நடக்கிறது,'' என்றான்.



அங்கிருந்து சென்ற சிங்கி போங்கா ஒரு குழந்தையுடன் ஒரு பெண்மணி வருவதைப் பார்த்தார். அவளிடம் அந்தக் குழந்தை எப்போது பிறந்தது என்று கேட்கவே, அவளும் ''இன்று தான்!'' என்றாள். இப்படியே அவர் யாரிடம் எதைக் கேட்டாலும் இன்று என்ற பதிலே அவருக்குக் கிடைத்தது. அப்போது அவர், 'இங்கே உள்ளவர்களுக்கு காலத்தின் அளவு தெரியவில்லை. இரவு பகல் என்னவென்று அறியவில்லை. அதற்கு ஒரு வழி செய்ய வேண்டும்,' என்று தீர்மானித்தார்.

அவர் சூரியனை அழைத்து, ''இனிமேல் நீ மாலையில் மறைந்து காலையில் உதிக்க வேண்டும். அப்போதுதான் மக்கள் இருட்டில் வேலை செய்யமாட்டார்கள். அது ஓய்வு எடுக்கும் நேரம் என்று புரிந்து கொள்வார்கள். நீ காலையில்



என்று இராமல் இருட்டியதும் ஓய்வு என்று எண்ணி மகிழ்ந்தார்கள். இரவில் நட்சத்திரங்களைத் தவிர வேறு எதுவும் அவர்கள் கண்களுக்குத் தென்படவில்லை.

இருட்டில் முட்டி மோதி இடறி விழுவது அன்றாட நிகழ்ச்சி இதனால் குழப்பமே மேலிட்டது. அப்போது சிங்கிபோங்கா வந்து மக்களைக் கண்டு, ''இரவு பகல் என்று ஏற்பட்ட பின் எப்படி இருக்கிறீர்கள்?'' என்று கேட்டார்.

அவர்களும், ''காலையிலிருந்து மாலைவரை எல்லாம் சரியே! ஆனால் இருட்டிய பிறகு எங்களால் எதையும் பார்க்க முடியவில்லை. தோன்றியதும் அது மறுநாள் என்று தெரிந்து கொள்வார்கள்,'' என்றார்.

சூரியனும் அவ்வாறே செய்வதாகக் கூறினான். அன்றே மாலையில் மறைந்தான். உலகம் இருண்டது. மக்களுக்கு அதற்குக் காரணம் தெரியவில்லை. சிலர் ஓடினார்கள். சிலர் விழுந்தார்கள். குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தபோதே மரங்களிலிருந்து உருண்டனர். பெண்கள் பாத்திரங்களைப் போட்டு உடைத்தார்கள். யாருக்கு என்ன செய்வது என்றே தெரியவில்லை.

அப்போது அவர்களில் முதியவர், ''எல்லோரும் படுத்து ஓய்வு எடுங்கள். இருட்டில் நாம் எதுவும் செய்ய முடியாது,'' என்றார். எனவே இரவு என்பது ஓய்வு எடுக்கும் நேரம் என்று ஆகிவிட்டது.

மக்களும் எப்போதும் வேலை

## இயற்கை வளங்கள்

ஜார்கண்ட் என்றால் மலைப் பிரதேசம் என்று பொருள். இம் மாநிலம் கடல் மட்டத்திற்குமேல் 915 மீ. உயரத்தில் அமைந்துள்ளது. மலைகளும் காடுகளும் நிறைந்து உள்ளன. பல ஆறுகளும் ஓடைகளும் இதில் பாய்கின்றன.

ஜார்கண்டில் இரும்பு, மைக்கா, நிலக்கரி, பாக்சைட், தாமிரம், க்ரோமைட், சுண்ணாம்புக்கல், தங்கம் அலுமினியம், பீங்கான்கள், சிலிகா, முதலியவை ஏராளமாக உள்ளன. இம்மாநிலம் நம் நாட்டின் நிலக்கரியில் 37.5 சதவீதம், தாமிரம் 40 சதவீதம், இரும்பு 42 சதவீதம், மைக்கா 90 சதவீதம் கொண்டுள்ளது.

# மலைவாசிகளின் உறைவிடம்



இம்மாநிலத்தில் பல மலைச் சாதிப் பிரிவுகள் உள்ளன. இவை இம்மாநிலத்தின் மக்கள் தொகையில் 30 சதவீதம். சுமார் 30 பிரிவுகள் இங்கு உள்ளன. இந்தப் பிரிவுகளின் மக்கள் இம்மாநிலத்தின் மற்ற மக்களினின்று வேறுபட்டவர்களாக இருக்கிறார்கள்.

இப்பிரிவுகளில் முக்கியமானவை சந்தல், ஓரயோன், முண்டா, கரியா, ஹோ, செரோ கேர்வார், கோர்வா, ஹோரே என்பனவாம். இவர்கள் கலைகளிலும் கைவினைகளிலும் சிறந்து விளங்குகிறார்கள். இவர்களது வண்ண ஓவியங்கள் 5000 ஆண்டுகளுக்கு மேல் பழமையானவை. சந்தலி, பிட்டி சித்ரா, ஜடோபதியா என்பன ஓவியப் பாணிகளில் சில.

அதனால் இரவிலும் சூரியன் வந்தால் தான் நல்லது,'' என்றார்கள்.

சிங்கிபோங்காவோ, ''இரவில் சூரியன் வரமாட்டான். அவன் ஒவ்வொரு நாள் மாலையிலும் மறைய வேண்டும். அவனுக்குப் பதிலாக வெப்பம் இல்லாமல் இரவில் வெளிச்சம் கொடுக்கும் சந்திரனைக் கொடுக்கிறேன். அவனது வெளிச்சத்தால் நீங்கள் எதையும் பார்க்க முடியும். ஆனால் வேலை செய்ய முடியாது. இதனால் நீங்கள் விழவோ, தட்டுத் தடுமாறவோ மாட்டீர்கள்,'' எனக் கூறி சந்திரனைக் கொடுத்தார்.

இரவில் சந்திரன் வானத்தில் இருந்து கொண்டு ஒளி கொடுத்தான். அவனது ஒளி சூரியனது ஒளியை விட மங்கலாக இருந்தது. வெப்பமாக இல்லாமல் குளிர்ச்சியாகவும் இருந்தது. பகலில் சூரியன், இரவில் சந்திரன் என்று பகல் இரவு ஏற்படவே, மக்களும் குறித்த காலத்தில் வேலை, ஓய்வு என்று மகிழ்ச்சியுடன் இருக்கலானார்கள்.

அப்போது முதல் அவர்களுக்கு நேரத்தின் அளவு தெரிய வந்தது. சூரியன் தோன்றியதும் அது காலை என்றும் அது மேற்கில் மறைந்ததும் மாலை என்றும் தெரிந்து கொண்டார்கள். சூரியன் மறைந்தபின் இருள் பரவியதும் அதை இரவு என்றார்கள். சூரிய வெளிச்சத்தில் பகலில் வேலை செய்துவிட்டு இரவில் குளிர்ந்த நிலா வெளிச்சத்தில் ஓய்வு எடுத்து வரலானார்கள். இப்படியாக அவர்கள் இரவையும் பகலையும் அறிந்து கொண்டார்கள்.



## சிறுவன் சுதாரித்து விட்டான்!

ரூபஸ்போலக் தென் லண்டனில் தன் தாய் ஜில்பார்க்கருடன் வசித்துவரும் பனிரெண்டு வயதுச் சிறுவன். ஒரு நாள் அச்சிறுவன் பள்ளியிலிருந்து தன் வீட்டிற்கு வந்தபோது அங்கு தன் தாயைக் காணவில்லை. அவன் தாயார் பனிரெண்டு நாட்களாகியும் வீட்டிற்கு வரவில்லை. சிறுவன் அந்த நாட்களில் தனக்கு வேண்டியதைத் தயாரித்து சாப்பிட்டு பள்ளிக்கும் தினமும் போய் வந்தான். அவனுடைய தாயாருடன் அலுவலகத்தில் வேலை செய்யும் ஒரு பெண்மணி பல நாட்களாகத் தன் சிநேகிதி அலுவலகத்துக்கு வராமல் போனது கண்டு என்ன விஷயம் என்று விசாரிக்க அவளுடைய வீட்டிற்குச் சென்றாள். அப்போது தான் ரூபஸ் சுதாரித்துக் கொண்டு தனியே இருந்து வருவது எல்லோருக்கும் தெரிய வந்தது. இதன் பிறகு அவனது தாயார் அருகேயுள்ள ஹோட்டலில் கண்டுபிடிக்கப்பட்டு குழந்தையை கவனியாமல் விட்டதற்காக குற்றம் சாட்டப்பட்டாள்!



## மிதக்கும் ரயில்



சீனாவில் மக்கள் மிக அதிகமாக உள்ள ஷாங்காய் நகரில் ஜெர்மனியில் தயாரிக்கப்பட்ட 'மாக்லெவ்' ரயில் பூடோங் என்ற பகுதியிலிருந்து 31 கி.மீ தூரத்திலுள்ள விமான நிலையத்திற்கு 400 கி.மீ வேகத்தில் 14 நிமிடங்களில் போய்விட்டுத் திரும்பி வந்தது! அதில் சீனப் பிரதமர் ஜுரோங்ஜியும் ஜெர்மனி சான்ஸலர் கெர்ஹார்ட் ஷ்ரோல்டரும் பயணம் செய்தனர். காந்த சக்தியுள்ள இருப்புபாதையில் சில மில்லி மீட்டர்கள் உயரத்தில் மிதந்தவாறே இந்த ரயில் செல்கிறது. ஒரு சாதாரண டாக்ஸியில் இந்த தூரத்துக்குப் போய் வர ஒரு மணி நேரமாகிறது.



# கோபமே ஒருவனின் எதிரி

முருகனுக்கு எதற்கு எடுத்தாலும் கோபம் வந்துவிடும். இதற்குக் காரணம் அவனது பெற்றோர்கள் அவனைச் செல்லமாக வளர்த்துவிட்டது தான். அவனது போக்கு கட்டுக்கு அடங்காமல் போகவே ஒரு நாள் அவனது பெற்றோர்கள் இனிமேலும் அவனுக்கு செல்லம் கொடுக்கக் கூடாது என்று தீர்மானித்தார்கள். அன்று காலையில் தூங்கி எழுந்ததுமே முருகன் ''அம்மா! எனக்கு பசிக்கிறது. சீக்கிரம் சிற்றுண்டி கொடு. அவசர மாக வெளியே போய் நண்பர்களுடன் விளையாட வேண்டும்,'' என்றான்.

அவளது தாயாரோ, ''எப்பொழுது பார்த்தாலும் என்னடா விளையாட்டு? இன்று பின்புறத் தோட்டத்தில் செடிகளுக்குப் பாத்தி கட்டி நீர் பாய்ச்சிவிட்டு வந்தால்தான் உனக்கு சிற்றுண்டி,'' என்றாள்.

முருகன் கோபத்தோடு, ''இனி மேல், இந்த வீட்டில் எதையுமே சாப்பிடமாட்டேன்,'' என்று இரைந்தான். அதைக் கேட்டுக் கொண்டிருந்த அவனது தந்தை, ''ரொம்ப சரி. இன்று தோட்ட வேலை செய்தால்தான் உனக்கு சாப்பாடு. செய்யாவிட்டால் பட்டினியாகத் தான் கிடக்க வேண்டும்,'' என்று கத்தினார்.

தன் தாயும் தந்தையும் இப்படிச் சொன்னதைக் கேட்டு முருகன் மேலும் கோபம் கொண்டு வீட்டை விட்டு வெளியே சென்றான். நேரே அவன் தான் தினமும் விளையாடும் இடத்திற்குச் சென்றபோது அவனது நண்பன் கிட்டு தான் இருந்தான். அவன் வேர்க் கடலை கொறித்துக் கொண்டிருந்தான்.

முருகன் அவனிடம், ''எனக்குக்

- சுதா சுவாமி -



கொஞ்சம் கொடு!'' என்று கேட்டான். கிட்டுவோ கையில் வைத்திருந்த கொஞ்சம் கடலையையும் வாயில் போட்டுக் கொண்டு முருகனுக்குக் கொக்காணி காண்பித்தான். இதனால் கோபம் கொண்ட முருகன், ''இனி மேல் உன்னுடன் பேச மாட்டேன் போ'' என்றான்.

இதற்குள் அவனுடைய மற்ற நண்பர்கள் வந்தார்கள். ஆனால் தின்பதற்கு அவர்கள் எதையுமே எடுத்து வரவில்லை. இதனால் முருகனுக்கு அவர்கள் மீதும் கோபம் வந்தது. எனவே அவர்களிடம் பேசாமல் அங்கிருந்து அவன் போய் சற்று தூரத்தில் மரத்தடியே ஆப்பம் வார்த்து விற்கும் கிழவியை அணுகினான்.

அவளிடம், ''பாட்டி! எனக்கு ஒரு ஆப்பம் கொடு!'' என்று அவன் கேட்க, கிழவியும் ''காசு கொடுத்தால் கிடைக்கும். இல்லாவிட்டால் கிடையாது,'' என்றாள்.

இதைக் கேட்ட முருகன் கோபம் கொண்டு கிழவி ஆப்ப மாவு வைத்திருந்த சட்டியைக் காலால் எட்டி உதைக்க முயன்றான். அப்போது அங்கே படுத்திருந்த கிழவியின் நாய் எழுந்து ஓடிவரவே, அதைக் கண்ட முருகன் பயந்து தலைதெறிக்க ஓடினான். வழியில் கண்ட ஒருவன் அவனை நிறுத்தி ''ஏன் ஓடுகிறாய்?'' என்று கேட்கவே, முருகன் தன் பசியைக் கூறி ஆப்பக் கிழவி ஆப்பம் கொடுக்க மறுத்ததையும் அவளது நாய் துரத்தி வந்ததையும் கூறினான். அவனும் ''சரி, என்னோடு என் தோட்டத்திற்கு வந்து வேலை செய். சாப்பாடு போடுகிறேன்,'' என்றான்.

அதைக் கேட்ட முருகன் கோபத்தோடு, ''என் வீட்டுத் தோட்டத்திலேயே நான் வேலை செய்யவில்லை. உன் தோட்டத்திற்கா வந்து வேலை செய்வேன்? போ, போ!'' என்று கூறி ஒரு கல்லை எடுத்து அதனால் அவனை அடித்து விரட்டலானான். ஆனால் அந்த மனிதன் முருகனைப் பிடிக்க வரவே, முருகன் அங்கிருந்து ஓடினான். இப்படியே அன்று மாலைவரை யாராவது ஒருவர் மீது கோபம் கொண்டுபோய்க் கொண்டே இருந்தான். பசியால் வாடிய அவன் இருட்டும்போது ஊர் எல்லையில் உள்ள ஆசிரமத்தை அடைந்தான்.

அது கிருஷ்ணானந்தரின் ஆசிரமம். முருகன் அவரை வணங்கி தன்

நிலையைக் கூறினான். அவரும், ''இன்னும் சற்று நேரத்தில் இங்கு எல்லோருக்கும் சாப்பாடு போடுவார்கள். நீயும் அவர்களோடு சேர்ந்து சாப்பிடலாம். இப்போது நான் என்னைக் காண வந்தவர்களுக்கு அறிவுரை வழங்கப் போகிறேன். நீயும் அவற்றைக் கேள்!'' என்றார். முருகனுக்கு அப்போதும் கோபமே வந்தது. அவன் ஏதோ சொல்வதற்குள் பசிமயக்கத்தால் கீழே விழுந்து விட்டான்.

அதைக் கண்டு ஆசிரம சீடர்கள் முருகனின் முகத்தில் தண்ணீர் தெளித்து எழுப்பி உட்கார வைத்தார்கள். கிருஷ்ணானந்தர் பரிவுடன் அவன் முதுகில் தட்டி சீடர்களிடம் அவனுக்கு உணவு கொடுக்கும்படிக் கூறினார். அவனும் சீடர்களுடன் போய் அவர்கள் கொடுத்த உணவை உண்டான். அப்போது கிருஷ்ணானந்தர் அங்கு வந்து முருகனிடம், ''உன் பசி தீர்ந்ததா?'' என்று கனிவுடன் விசாரித்தார். அவனும் சந்தோஷத்துடன், ''தீர்ந்தது'' என்றான்.

கிருஷ்ணானந்தர் அவனைப் பற்றி விசாரித்து விட்டு, ''உன் கோபமே உனக்கு எதிரி. காரணமே இல்லாமல் இன்று காலையில் நீ உன் பெற்றோர் மீது கோபம் கொண்டாய். அதனால் இன்று பகல் முழுவதும் நீ பட்டினியுடன் இருக்க வேண்டியதாயிற்று. எனவே இனி கோபமே கொள்ளாதே!'' என்று அறிவுரை வழங்கினார். முருகனும், ''ஆம். என் தவறை உணர்ந்தேன். இப்போது என் பெற்றோர்கள் என்னைக் காணாது எப்படித் துடிதுடிக்கிறார்களோ?'' என்று கூறி கண்ணீர் உகுத்தான்.

கிருஷ்ணானந்தரும், ''கவலைப் படாதே. என் சீடன் ஒருவன் உன்னை உன் வீட்டிற்கு அழைத்துச் செல்வான். இனிமேல் யார் மீதும் கோபம் கொள்ளாதே!'' எனக் கூறி அனுப்பினார். முருகன் தன் பெற்றோரைக் கண்டு சந்தோஷமாய், ''எனக்கு கிருஷ்ணானந்தர் அறிவுரை கூறினார். என் கோபமே எனக்கு எதிரி என்பது நன்கு புரிந்தது. இனிமேல் எனக்குக் கோபமே வராது,'' என்றான். தம் மகன் திருந்திவிட்டது கண்டு முருகனின் பெற்றோர் மகிழ்ந்தனர்.



# நம் இந்தியா

*நம் நாடு சுதந்திரம் அடைந்தபின் பல துறைகளில் முன்னேற்றம் கண்டு சாதனைகளைப் புரிந்துள்ளது. இம்மாதம் முதல் அவை பற்றிய வினாக்களைக் கேட்கிறோம். உங்கள் விடைகள் சரியானவையா என்று சரிபாருங்கள்.*

1. நம்நாட்டின் அணுசக்தி கமிஷனின் முதலாவது தலைவர் யார்?
2. தாதாசாகிப் பால்கே பரிசுத்திட்டம் எப்போது நிறுவப்பட்டது? அதை முதலில் அடைந்தவர் யார்?
3. அண்டார்ட்டிகாவிற்குச் சென்ற முதலாவது விஞ்ஞானிகள் குழுவின் தலைவர் யார்? அவர்கள் எப்போது அதை அடைந்தார்கள்?
4. இமயமலை மீது 1989ல் ஒரு இந்தியக் குழு ஏறியது இதன் சிறப்பு என்ன?
5. ஆசிய ஸ்னூகர் சாம்பியனுக்கான போட்டியில் 1989ல் வெற்றி பெற்ற முதலாவது இந்தியர் யார்?
6. 'பறவை மனிதன்' என ஒருவரும் 'பாம்பு மனிதன்' என இன்னொரு இயற்கை நலம் பேணுபவரும் குறிப்பிடப்பட்டனர். அவர்கள் யாவர்?
7. நம் நாட்டில் தசம நாணயமுறை எப்போது அமுலாக்கப்பட்டது?
8. இந்தியாவில் 1953ல் நிகழ்ந்த எந்த நிகழ்ச்சி உலகத்தின் கவனத்தை ஈர்த்தது?
9. வீரச் செயல்களுக்காக நம் நாடு அளிக்கும் உயர்ந்த பட்டம் என்ன?
10. யுனெஸ்கோ 1988ல் டென்னிஸ் விளையாட்டு வீரருக்கு மேஃபேர் ப்ளேட்ரோஃபியை வழங்கியது. அவர் யார்?

*(விடைகள் அடுத்த மாதம்)*

## மார்ச் வினாக்களின் விடைகள்

1. அனுமான், பரசுராமர், மகாபலி, வியாசர், விபீஷணன், கிருபர், அசுவத்தாமா.
2. குபேரன்.
3. சாயாதேவி.
4. மாம்பழம்.
5. சந்தனு, பீஷ்மர்.
6. சர்வதமனன்.
7. சிகண்டி.
8. எல்லோரும் சூரிய வம்சத்தவர்.
9. அர்ஜுனனின் தாயான குந்திதேவி.



# விநாயகர்

வாதாபி நகரின் நடுவே உள்ள பாறை விநாயகர் உருவத்தை அடைய வேண்டும் என அகஸ்தியர் விரும்பினார். லோபாமுத்திரை சித்திரக் கலையில் தேர்ந்தவள். அவள் அங்கு வந்து அந்தப் பாறையைப் பார்த்தாள். பிறகு அந்தப் பாறையில் எப்படி விநாயகரின் திருவடிவத்தை வடிக்க வேண்டும் என்பதற்கான படத்தையும் வரைந்தாள்.

ஆனால் அந்தப் படத்தின்படி விநாயகரின் திருவுருவத்தை அக்கல்லில் செதுக்கத் தக்க சிற்பி கிடைக்கவில்லை. பலர் வந்து முயன்றும் முடியவும் இல்லை. அகஸ்தியரோ அந்தப் பாறையின் முன் உட்கார்ந்து அதனையும் லோபாமுத்திரை வரைந்த விநாயகர் படத்தையும் மாறிமாறிப் பார்த்தவாறே இருக்கலானார்.

வந்த சிற்பிகள் எல்லோரும் ''இப்படிப்பட்ட உருவத்தை எங்களால் வடித்துத் தர முடியாது. இதை தேவ சிற்பியான விசுவகர்மாவோ அல்லது மயனோ தான் வந்து செதுக்க வேண்டும்,'' என லோபாமுத்திரை வரைந்து கொடுத்த படத்தைப் பார்த்துவிட்டுக் கூறினார்கள். வேறு சிலர், ''இந்தப் பாறையில் செதுக்க சாதாரண உளியால் முடியாது. தெய்வீக சக்தி வாய்ந்த உளி தேவை,'' என்றார்கள்.

இந்த சமயம் பார்த்து தேவ சிற்பியான விசுவகர்மாவும் மயனும் எங்கேயோ போய்விட்டார்கள். ஏனெனில் அவர்களின் மனைவிகள் அவர்களோடு கோபித்துக்கொண்டு தம் பிறந்த வீட்டிற்குப் போய்விட்டார்களாம். அகஸ்தியருக்கு அந்த விநாயகர் சிலை வடிக்கச் செய்வது ஒரு பெரும் பிரச்னையாக ஆகிவிட்டது.



அவர் அன்ன ஆகாரம் இன்றி அந்த பாறை முன் அமர்ந்து ''விநாயகரே! என் விருப்பம் என்றாவது நிறை வேறுமா? இதனை நிறைவேற்றி வைப்பது உன் பொறுப்பு!'' எனக் கூறியவாறே இருக்கலானார்.

ஒருநாள் மாலை ஒரு மலைச் சாதி சிறுவன் அவர் இருந்த இடத்திற்கு வந்தான். அவன் கையில் ஒரு உளி இருந்தது. அவனைப் பார்த்ததும் ஒரு சிற்பியோ என்ற சந்தேகம் அகஸ் தியருக்கு ஏற்பட்டது.

அவர் அவனது கையிலுள்ள உளி யைப் பார்த்தவாறே இருந்தார். அச் சிறுவனோ, ''முனிவர் போலுள்ள தாங்கள் இந்த பாறையின் முன் உட் கார்ந்திருக்கிறீர்களே! இங்கே ஏதாவது கல் வேலை கிடைக்குமா என்றே வந்தேன்,'' என்றான்.

அகஸ்தியரும், ''வாப்பா வா. இந் தப் பாறையை விநாயகர் வடிவமாக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறேன். ஆனால் இதுவரை சரியான சிற்பி கிடைக்கவில்லை,'' என்றார்.

சிறுவனும், ''எனக்கு இரண்டு வேலைகள் மட்டுமே தெரியும். ஒன்று நன்றாக வயிறு நிறையச் சாப்பிடுவது. மற்றது சிற்பவேலை,'' என்றான். அது கேட்டு அகஸ்தியர் சிரித்து, ''இந்த மாபெரும் பாறையை மாபெரும் விநாயகர் வடிவமாக்கித் தரும் மாபெரும் சிற்பி யாராவது வருவார் களா என்றுதான் நான் காத்துக் கிடக்கிறேன். நீயோ சிற்பி எனக் கூறிக் கொள்கிறாய். மிகச் சிறியவனாகவும் இருக்கிறாய். இது உயரமான கடின மான பாறை. இதில் உன்னால் எங்கே விநாயகரின் வடிவைச் செதுக்க முடி யும்?'' என்று கூறினார்.

சிறுவனான சிற்பி சிரித்துக் கொண்டே, ''நான் வயதிலும் உருவத் திலும் சிறிய சிற்பி என்பதால் என் வேலையின் தரம் குறைந்து இருக்கும் என எண்ணிவிட்டீர்களா? உருவம் பெரிதாக இருந்துவிட்டால் மட்டும் போதுமா? திறமை வேண்டாமா?'' எனக் கூறியவாறே தந்தப்பிடி போடப் பட்ட தன் உளியை அவர் முன் ஆட்டிக் காட்டினான்.

அகஸ்தியர் அதனைக் கண் கொட் டாமல் பார்த்தார். அப்போது அச் சிறுவன் அதனை எடுத்து அப்பாறை யின் மீது விட்டெறிந்தான். உளியின் முனை பாறை மீது பட்டதும் மின்னல் போலப் பளிச்சென வெளிச்சம் ஏற் பட்டது. இடிஇடிப்பதுபோன்ற சத் தமும் கேட்டது. அந்தப் பாறையில் ஒரு துவாரம் ஏற்பட்டது.

சிறுவன் ''இதுதான் விநாயகரின் தொப்புள். இனி பாருங்கள் விநாயகரின் வடிவம் விரைவில் அமைந்து விடும்'' என்று கூறிப் 'ஸ்ரீகணநாத' எனப் பாட ஆரம்பித்தான். பிறகு அவன் ''இந்தப் பாறையில் காந்த சக்தி உள்ளது. அதனால் உளி இதன் மீது படும்போது ஒளி 'பளிச்' 'பளிச்' சென்று ஏற்பட்டுக் கொண்டே இருக்கும். அதனால் இந்த வேலை முடியும் வரை இந்தப் பகுதிக்கு ஓர் ஈ, காக்காய் கூட வரக் கூடாது. இடி இடிப்பது போன்ற சத்தம் ஏற்படும். அதனால் யாரும் பயந்துவிடவும் வேண்டாம். அகஸ்திய மாமுனிவரே! இனி கவலையைவிட்டு நீங்கள் செல்லுங்கள். நாளைக் காலையில் வந்து பாருங்கள். நீங்கள் விரும்பியபடி விக்கிரகம் தயாராக இருக்கும்,'' என்றான்.

அகஸ்தியரின் ஆச்சரியத்திற்கு அளவே இல்லை. அவர் லோபாமுத்திரை வரைந்த படத்தை எடுத்து அச்சிறுவனிடம் கொடுக்கப் போனார். அச்சிறுவனும், ''இதை தான் நீங்கள் நான் இங்கே வந்த போதே காட்டினீர்களே! நான் ஒரு முறை பார்த்து விட்டால் போதும், பிறகு மறக்கவே மாட்டேன். அடிக்கடி அதைப் பார்க்க வேண்டுமென்ற அவசியம் இல்லை. நான் என் வேலையை முடித்துவிடுகிறேன். பிறகு படம் எழுதியவர் வந்து பார்த்து ஏதாவது குறை இருந்தால் சொல்லட்டும். நீங்கள் இந்தப் படம் வரைய எவ்வளவு கொடுத்தீர்கள் என்பது தெரியாது. ஆனால் என் வேலை முடிந்ததும் எனக்கு எவ்வளவு கொடுக்கப் போகிறீர்கள் என்று பார்க்கிறேன்,'' என்றான்.



அதைக் கேட்ட அகஸ்தியர் திகைத்தார். அவர் லோபாமுத்திரைக்குக் கொடுக்க வேண்டிய பணத்தைத் தனியாக எடுத்து வைத்திருந்ததால் அவரிடம் வேறு பணம் எதுவும் இருக்கவில்லை. ஏதோ இருக்கும் கொஞ்சம் பணத்தைத்தான் கொடுக்க முடியும். இப்படி யோசித்தவாறே அகஸ்தியர் அங்கிருந்து சென்றார்.

அப்போது எதிரே வந்த லோபாமுத்திரையின் முகம் ஒளிமயமாயும் சந்தோஷத்துடனும் இருப்பது கண்டு அவர் ''என்ன விஷயம்?'' என்று கேட்டார்.

அவளும் ''நான் உங்களிடம் நல்ல ஆடைகளும் தங்க நகைகளும் வேண்டும் என்று ஏன் கேட்டேன் என்று நினைத்து இப்போது வெட்கப் படுகிறேன். ரிஷிபத்தினி ரிஷியின்



வாழ்க்கைக்கு ஏற்ப இருக்க வேண்டும். நான் உங்களை அதை எல்லாம் கேட்டது ஏதோ ஒரு கைங்கரியத்திற்காக உதவத் தான் போலும். ஏதோ ஒரு சக்திதான் என்னை அப்படிக் கேட்கச் சொல்லி இருக்கிறது. அதெல்லாம் எனக்கு வேண்டவே வேண்டாம்,'' என்றாள்.

அதுகேட்டு அகஸ்தியர் உள்ளூர மகிழ்ந்து போனார். அவர் ''ஒரு சிற்பி கிடைத்துவிட்டான். விடிவதற்குள் சிலையைச் செய்துவிடுவானாம்!'' என்றார். அதுகேட்டு லோபாமுத்திரை, ''ஆ! விடிவதற்குள் சிலை தயாராகி விடுமா? அந்த சிற்பி தேவனா அல்லது பரமேசுவரனா?'' என்று ஆவலுடன் கேட்டாள்.

அதற்கு அகஸ்தியரும், ''தேவனும் இல்லை. கடவுளும் இல்லை. மானிடனே. அதுவும் சிறுவன். அவனுக்கு என்ன கொடுக்க வேண்டும் என்பது பற்றித் தெரியாமல் விழிக்கிறேன்'' என்றார்.

அவளும், ''எனக்காக நீங்கள் சேர்த்து வைத்த பணம் மற்றும் நகைகள் எல்லாம் உள்ளனவே. அவை போதாதா?'' என்று கேட்டாள். அகஸ்தியரும் ''அதுபற்றி காலையில் யோசிக்கலாம்,'' எனக் கூறினார்.

அப்போது லோபாமுத்திரை, ''நாளை விநாயக சதுர்த்தி. மறந்து விட்டீர்களா?'' என்று கேட்டாள். அகஸ்தியரும், ''ஆ! நாளைக்கா விநாயக சதுர்த்தி? இந்த விநாயக விக்கிரகம் நாளைக் காலைத் தயாராவது எவ்வளவு பொருத்தமாக இருக்கிறது பார்!'' என்றார். அப்போது லோபாமுத்திரை, ''எனக்கு என்னவோ அந்தச் சிறுவன் மானிடன் அல்ல என்றே தோன்றுகிறது,'' என்றாள்.

அகஸ்தியரும் அவள் கூறுவதில் உண்மை இருப்பதாக நினைத்தார். இரவுப் பொழுது கழியலாயிற்று. ஆனால் அவருக்குத் தூக்கமே வரவில்லை. பாறையருகே என்ன நடக்கிறது என்ற ஆவல் அவர் மனதில் ஏற்படவே எழுந்து அங்கு சென்றார்.

அவர் பாறை அருகே சென்றபோது ஆயிரக்கணக்கான உளிகள் பாறை மீது 'டங்' 'டங்'கென மோதும் சத்தத்தைக் கேட்டார். மின் பொறிகள் பாறையிலிருந்து தெரித்து வெளி வந்தன. அது கனவா நனவா என அவர் தம் கண்களை ஒருமுறை கசக்கிக் கொண்டு பார்த்தார். அவருக்குத் தலையே சுற்றுவது போல் இருந்தது. அப்படியே மயங்கி கீழே விழுந்துவிட்டார்.

யாரோ தன்னைத் தட்டி எழுப்புவது

உணர்ந்து அகஸ்தியர் கண் விழித்துப் பார்த்தார். அப்போது நன்கு விடிந்து விட்டது. அச்சிறுவனான சிற்பிதான் அவரை தட்டி எழுப்பியவன்.

அவன் அவரிடம், ''என்ன மக ரிஷியே! இங்கே படுத்துக் கனவு கண்டு கொண்டிருக்கிறீர்களா? யோகத் தியா னம் செய்யும் நீங்களா கண் மூடிக் கனவு காண்பது? விக்கிரகம் தயாராகி விட்டது. படம் வரைந்து கொடுத்த வரை அழைத்து வாருங்கள். அவர் வரைந்தது போல இது இருக்கிறதா என்று பார்க்கட்டும்!'' என்றான்.

அதே சமயம் லோபாமுத்திரை ஓர் அண்டா நிறைய மோதகங்களையும் இட்டிலிகளையும் எடுத்துக் கொண் டும் மற்றொரு குடத்தில் நீரும் புஷ்பங் களும் எடுத்து கொண்டும் அங்கே வந்து சேர்ந்தாள்.

அகஸ்தியரோ படிகம் போலப் 'பளபள'வென மின்னும் விநாயக விக்கிரகத்தைக் கண்டு திகைத்து நின்று கொண்டிருந்தார். சிறுவனோ, ''இதற் குக் கூலியாக என்ன கொடுக்கப் போகி றீர்கள்?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டான்.

அகஸ்தியரோ, ''சிற்ப சிரோண் மணியே! உனக்கு என்ன கொடுத்தா லும் தகும். ஆனால் என்னிடம் ஏதோ கொஞ்சம் பணம் உள்ளது. அதை எல்லாம் உனக்கே கொடுத்துவிடு கிறேன். ஏற்றுக் கொள்!'' என்றார்.

அப்போது அச்சிறுவன், ''அது சரி. அந்தப் படம் வரைய என்ன கொடுத் தீர்கள் என்று இன்னமும் சொல்ல வில்லையே. அது அருமையான கலைத்திறன் நிரம்பிய படம். அதைப் போல விக்கிரகம் செய்வது மிகவும்



கடினமான வேலையே!'' என்றான். அப்போது அகஸ்தியர், ''ஐயா சிற்பி யாரே! அந்தப் படத்தை வரைந் தவருக்கு நான் எதுவுமே கொடுக்க வில்லை. ஏனெனில் அந்த படத்தை வரைந்தது என் மனைவியேதான்,'' எனக் கூறினார். லோபாமுத்திரையோ தியானத்தில் நின்றாள்.

அப்போது அந்த சிறுவன், ''மகரிஷியே! நான் மட்டும் அந்தப் படத்தை வரையச்சொல்லி இருந்தால் இப்படி அழகாக வரைந்தவருக்கு ஒரு மாபெரும் நகரத்தை நிர்மாணிக்க எவ்வளவு பணம் பிடிக்குமோ அத னைக் கொடுத்து அந்த ஓவியரை கௌரவிப்பேன். அவ்வளவு பணம் இந்தப் பெண்மணிக்கு சேர வேண் டும்,'' என்றான்.

அகஸ்தியரும் ''ஆமாம். நானும் அவ்வளவு பணம் அவளுக்காகச் சேர்த்து வைத்திருக்கிறேன்'' என்றார்.

சிறுவனும், ''ஓ! அப்படியா? உங் கள் மனைவிக்காக எடுத்து வைத்த பணத்தையா எனக்குக் கொடுக்கப் போகிறீர்கள்? அதை நான் வாங்கிக் கொள்வது மாபெரும் பாவம். அதில் இருந்து ஒரு செப்புக் காசு கூட எனக்கு வேண்டாம்,'' என்று கூறினான்.

பிறகு அவன் லோபாமுத்திரையை பார்த்து ''அம்மா! தங்கள் கையால் எனக்கு ஒரு விள்ளல் இட்லி கொடுங் கள். அதுதான் நான் உங்களிடம் கேட்கும் கூலி,'' என்றான்.

அதைக் கேட்ட லோபாமுத்திரை இட்லிப் பாத்திரத்தையே எடுத்து அந்தச் சிறுவனின் முன் வைத்து அவன் கால்களில் விழுந்து வணங்கி, ''விநாயகரே! உங்களைக் கண்டு இந்த ஜென்மம் சாபல்யம் அடைந்தது,'' எனக் கூறினாள். அப்போதே அந்த சிறுவனும் அங்கிருந்து மாயமாய் மறைந்து போனான்.

அப்போது தான் அகஸ்தியரின் கண் களை மறைத்திருந்த மாயை அகன்றது. அவர் அந்த விநாயக விக்கிரகத்தின் முன் நின்று வணங்கி ''மூஷிக வாக னனே, விநாயகா! நான் தவ வலிமை பெற்றவன், மாபெரும் யோகி என் றெல்லாம் கர்வப்பட்டு கொண்டிருந் தேன். ஆனால் உன் முன் நான் எம் மாத்திரம்?'' என்று கூறினார். விநாய கத் தோத்திரம் அப்போது அவரது காதில் ஒலிக்க, அகஸ்தியரும் லோபா முத்திரையும் விழுந்து வணங்கினர்.







# மூவரில் ஒருவர்

கஜபுரமன்னன் கஜசிம்மனின் பொக்கிஷதாரர் தனசேகரர். அவருக்கு மிகவும் வயதாகிவிட்டது. இனி தான் அதிக நாட்கள் வாழ முடியாது என அறிந்து கொண்ட அவர் மன்னனிடம், ''அரசே! இப்போதே எனக்கு பதிலாக ஒரு நல்ல பொக்கிஷதாரரை நியமித்துவிடுங்கள். ஏனெனில் நான் அதிக நாட்கள் வரை உயிருடன் இருக்கமாட்டேன்,'' என்றார்.

மன்னனும், ''நீங்கள் நேர்மையாய் சட்டதிட்டங்களுக்கு உட்பட்டு முறையாக நடப்பவர். எதையும் அவசரப்பட்டு கூறமாட்டீர்கள். சொல்வதை நிறைவேற்றுவீர்கள். இப்படிப்பட்ட உங்களது பணியால் நான் பயனடைந்தது அளவிட முடியாதது. இப்படிப்பட்ட உங்களுக்குச் சமமாக வேறுயாரைக் காண முடியும்? எனினும் தங்கள் மகன் அநேகமாகத் தங்களைப் போலத்தானே இருக்கிறான். அவனையே இப்பதவியில் அமர்த்தி விடலாமே!'' என்றான்.

அதற்கு தனசேகரர், ''என் மகன் நேர்மை தவறாதவனே! ஆனால் பொக்கிஷத்தை நிர்வகிக்கும் அளவிற்குத் திறமை பெற்றவன் அல்ல. அதனால் எனக்குத் தெரிந்த ஒருவனை இப்பதவிக்குச் சிபாரிசு செய்கிறேன். அவன் என் தூரத்து உறவினன். புதூர் என்ற ஊரில் வசிப்பவன். பெயர் சுந்தரம். அவனை வரவழைக்கிறேன்'' என்றார். மன்னனும் அவனை நியமிக்கலாம் எனக் கூறினான்.

ஆனால் மறுநாளே தனசேகரர் மாரடைப்பால் இறந்துவிட்டார். இதனால் பொக்கிஷதாரரை உடனேயே நியமிக்க வேண்டிய அவசியம்

- சிவனார் செல்வன் -



ஏற்பட்டுவிட்டது. மன்னன் தன் மூத்த அமைச்சரிடம் அது பற்றிப் பேசவே, அவரும் ''நாம் மாறுவேடத்தில் புதூருக்குப் போய் சுந்தரத்தைப் பற்றி விவரமாகத் தெரிந்து கொண்ட பிறகே அவனை இப்பதவிக்கு நியமிக்க வேண்டும்,'' என்றார். மன்னனும் அந்த அறிவுரையை ஏற்றான். மறு நாளே மன்னனும் அமைச்சரும் மாறுவேடத்தில் புதூருக்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

புதூரில் அவர்கள் சுந்தரத்தைப் பற்றி விசாரித்தபோது அந்தப் பெயரில் மூன்று பேர்கள் இருப்பதும் மூவரும் தனசேகரரின் உறவினர்கள் என்றும் தெரிய வந்தது. மூவரும் நல்லவர்கள் என்றும் நேர்மை தவறாதவர்கள் என்றும் அவர்கள் அந்த ஊரில் யாரிடம் கேட்டாலும் பதில் பெற்றார்கள்.

அப்போது அமைச்சர் மன்னனிடம், ''நாம் வீடுகளில் வசதியாக வாழ்பவர்களிடம்தான் விசாரித்தோம். அதனால் அதன் அடிப்படையில் அவசரப்பட்டு முடிவு எடுக்க வேண்டாம். தாழ்நிலையிலுள்ள யாராவது ஒருவனைப் பார்த்துக் கேட்போம். அதோ ஒருவன் தாடியும் மீசையுமாய் பரதேசிபோல் இருக்கிறான். அவனிடம் விசாரிக்கலாம்,'' என்றார். மன்னனும் சரி எனவே இருவரும் அந்த மனிதனை அணுகினார்கள்.

அவர்கள் அவனிடம், ''உன் பெயர் என்னப்பா? நீ இந்த ஊர்க்காரனா? என்ன வேலை செய்கிறாய்?'' என்று கேட்டார்கள். அவனும், ''என் பெயர் கண்ணன். இந்த ஊர்க்காரன்தான். வேலை என்று எதுவும் இல்லை. யார் என்ன சொன்னாலும் அதை செய்து அவர்கள் கொடுப்பதை வாங்கிக் கொண்டு காலம் கழிக்கிறேன்,'' என்றான். அப்போது மன்னன் ''நீ நாங்கள் கூறுகிறபடி செய்தால் உனக்கு பத்து வராகன்கள் கொடுக்கிறோம்'' என்றான். அவனும், ''பத்து வராகன்களா! வேலையைச் சொல்லுங்கள். இப்போதே செய்து முடிக்கிறேன்,'' என்றான்.

அப்போது அமைச்சர், ''இந்த ஊரில் மூன்று பேர்கள் சுந்தரம் என்று இருக்கிறார்கள். நீ அவர்களைக் கண்டு இன்னும் இரண்டு நாட்களில் அவர்களுக்கு அரசாங்க வேலை கிடைக்கப்போவதாக ஜோசியம் சொல்லி அதற்கு அவர்கள் என்ன சொல்கிறார்கள் என்பதை எங்

களுக்குச் சொல்லவேண்டும். நாங் களும் உன் கூட வருகிறோம். நீ அவர்களிடம் ஜோசியம் பலித்த பிறகு அவர்கள் எதைக் கொடுத் தாலும் வாங்கிக் கொள்வதாகக் கூறு!'' என்றார்.

கண்ணன் முதலில் அவர்களை நெட்டை சுந்தரத்திடம் அழைத்துப் போனான். அந்த சுந்தரமும், ''என்ன கண்ணா? என்ன விஷயம்?'' எனக் கேட்டான். அப்போது அமைச்சர், ''இவன் மிக நன்றாக ஜோசியம் சொல்கிறான். இவனைப் பற்றித் தெரியுமா?'' என்று கேட்க, நெட்டை சுந்தரனும் ''ஓ! தெரியும். ஜோசிய மும் சொல்வானே!'' என்றான்.

அப்போது கண்ணனும் நெட்டை சுந்தரத்திடம், ''உங்களுக்கு இன்னும் இரண்டு நாட்களில் அரசாங்க வேலை கிடைக்கப் போகிறது,'' என் றான். அது கேட்டு நெட்டை சுந்தரம், ''நீ சொல்கிறபடி அரசாங்க வேலை கிடைத்தால் உனக்கு பத்தாயிரம் வரா கன்கள் கொடுக்கிறேன்,'' என்றான். அதைக் கேட்டு கண்ணன் சிரித்த வாறே விடைபெற்றுக் கொண்டு மன் னனையும் அமைச்சரையும் அழைத் துக் கொண்டு அடுத்து குட்டை சுந்தரத்தின் வீட்டை அடைந்தான்.

அங்கும் கண்ணன் குட்டை சுந் தரத்திற்கு இன்னமும் இரண்டு நாட் களில் அரசாங்க வேலை கிடைக்கும் என்று ஜோசியம் கூறினான். குட்டை சுந்தரமும், ''நீ சொல்கிறபடி நடந் தால் உனக்கு ஒரு மாடி வீடு கட்டித் தருகிறேன்,'' என்றான். அதைக் கேட்ட கண்ணன் சிரித்துவிட்டு விடை பெற்றுக் கொண்டு தன்னோடு



வந்த இருவரையும் அழைத்துக் கொண்டு தருமவான் சுந்தரத்தின் வீட்டிற்குச் சென்றான்.

அங்கு கண்ணன் அந்த சுந்தரத்தைக் கண்டு அவனுக்கு இன்னும் இரண்டு நாட்களில் அரசாங்க வேலை கிடைக்கப் போவதாக ஜோசியம் கூறினான். அதைக் கேட்ட சுந்தரம், ''நீ ஜோசியம் கூறியபடி நடந்தால் உனக்கு என் முதல் மாதச் சம்பளத்தைப் பரிசாகக் கொடுக்கிறேன்,'' என்றான். அதைக் கேட்ட கண்ணன் 'ஆ' என்று கூவியவாறே தன் நினைவை இழந்து விழுந்து விட்டான்.

உடனே சுந்தரம் ஓடிப்போய்த் தண்ணீர் கொண்டு வந்து அவனது முகத்தில் தெளித்து மயக்கத்தைப் போக்கி உட்கார வைத்தான். மன்னன் அவனிடம், ''ஏனப்பா மயங்கி விழுந்துவிட்டாய்?'' என்று கேட்டான். கண்ணனும் ''நெட்டை சுந்தரமும் குட்டை சுந்தரமும் நல்லவர்களே! ஆனால் அவர்கள் தாம் சொன்னதை நிறைவேற்ற மாட்டார்கள். ஆனால் இந்த தருமவான் சுந்தரம் அப்படிப்பட்டவர் அல்ல. எதையும் நன்கு யோசித்துச் சொல்லி அதன்படி நடப்பவர். அரசாங்க வேலையில் சம்பளம் பெரிய தொகையாகவே இருக்கும். இவர் முதல் மாத சம்பளத்தையே எனக்கு கொடுப்பதாகக் கூறியதும் அவ்வளவு பெரிய தொகை கிடைக்கிறதா என்ற மகிழ்ச்சியில் நினைவிழந்து விழுந்துவிட்டேன்,'' என்றான். அப்போது அமைச்சர் மன்னனிடம், ''தனசேகரர் குறிப்பிட்ட சுந்தரம் இவர் தான்,'' என்றார்.

அப்போது மன்னன் சுந்தரத்திடம் தாம் இருவரும் யார் என்பதைக் கூறி ''இனி நீங்கள் என் பொக்கிஷ அதிகாரி. தனசேகரர் கூறியபடி நேர்மை, திறமை, எதையும் யோசித்துச் சொல்லி செயல்படும் தன்மை உங்களிடம் உள்ளது. இப்போதே எங்களோடு தலை நகருக்கு வந்து அந்தப் பதவியை ஏற்றுக் கொள்ளுங்கள்'' என்றான்.

சுந்தரமும் அவர்களை பணிவுடன் வணங்கி அவர்களோடு தலை நகருக்கு சென்று பொக்கிஷதாரர் பதவியை ஏற்றுக் கொண்டான்.





# சமரசம் செய்து வைத்தது!

கந்தனும் கனகாவும் தினமும் அற்ப விஷயங்களுக்கு எல்லாம் சண்டை போட்டுக் கொள்ளும் தம்பதிகள். அக்கம்பக்கத்தவர்கள் அவர்களது சண்டைகளை விலக்கியே அலுத்துப் போய்விட்டார்கள். எனவே யாரும் அந்தக் கணவன் மனைவி சண்டை பற்றிக் கவலைப் படவில்லை. ஆனாலும் அவர்கள் இருவரும் சண்டை போடுவதை நிறுத்தவே இல்லை.

ஒருநாள் கனகா தன் கணவனிடம், ''நாளை என் அண்ணன் வீட்டில் கல்யாணம். இன்று மாலையே கிளம்பினால் தான் முகூர்த்தத்திற்குப் போய்ச் சேர முடியும். சீக்கிரம் தயாராகுங்கள்,'' என்றாள்.

கந்தனோ, ''கண்டவன் வீட்டிற் கெல்லாம் போய் ஓசிச் சாப்பாட்டிற் காக நான் துடிக்கமாட்டேன். வேண் டுமானால் நீ போய்க் கொள்,'' என் றான். அவளோ, ''வீட்டு மாப் பிள்ளை என்று மதித்தே உன்னைக் கூப்பிட்டிருக்கிறார்கள். நீ வராவிட் டால் உனக்குத் தான் நஷ்டம். சரிகைப் பட்டு வேட்டியும், அங்க வஸ்திரமும் இல்லாது போய்விடும். நான் போய் பட்டுப் புடவையை வாங்கிக் கொள்கிறேன். நீ ஒன்றும் வர வேண்டாம்,'' என்று அலட்சிய மாகக் கூறிவிட்டுக் கிளம்பினாள். அப்போது கந்தன் ''இரு, இரு. நானும் வருகிறேன்,'' என்று சொல் லிக் கொண்டே அவளோடு சேர்ந்து சென்றானன்.

அந்த ஊருக்கு ஓர் அடர்ந்த தோப் பின் வழியாகத் தான் போயாக வேண் டும். தோப்பினுள் நுழைந்ததுமே முனியன் என்பவன் கந்தனைக் கண்டு, ''கந்தா! உன் தந்தை உன் தங் கையின் ஊரில் படுத்த படுக்கையாக இருக்கிறார். உன்னைப் பார்க்க வேண்டுமாம். நீ உடனே அந்த ஊருக் குப் போ!'' என்று சொல்லிவிட்டுப்

- ரம்யா குருமூர்த்தி -



போனான். உடனே அவன், ''உன் அண்ணன் வீட்டுக் கல்யாணத்திற்குப் போக வேண்டாம். என் தந்தையைப் பார்க்க என் தங்கையின் ஊருக்குப் போகலாம்,'' என்றான்.

கனகாவோ, ''முடியாது. என் அண்ணன் வீட்டுக் கல்யாணத்திற்குத் தான் போக வேண்டும். அங்கே போனால் எல்லோருடனும் பேசி சந்தோஷமாக இருக்கலாம். உன் ஊருக்குப் போனால் எல்லோரும் கவலையோடு முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு இருப்பார்கள். யாரிடம் என்ன பேச முடியும்?'' என்றாள்.

கந்தனோ, ''என் தங்கையின் ஊருக்குத் தான் போக வேண்டும். நான் உன் கணவன். நீ நான் சொல்கிற படி தான் நடக்க வேண்டும்,'' என்று கத்தினான்.

கனகாவோ, ''முடியாது. உன் பேச்சைக் கேட்கமாட்டேன். நீ நான் சொல்கிறபடி தான் நடக்க வேண்டும்,'' என்றாள். கந்தனோ, ''மனைவியின் பேச்சைக் கேட்டால் உருப்படவே முடியாது,'' என்றான். இப்படியே உரத்த குரலில் அவர்கள் வாதம் செய்து கொண்டிருந்தார்கள்.

அப்போது அருகே இருந்த புளிய மரத்திலிருந்து ஒரு பிசாசு அவர்கள் முன் வந்தது. அப்போது கந்தன் அந்தப் பிசாசிடம், ''நீயே சொல். இவள் என் மனைவி. நான் சொல்வதைத் தானே இவள் கேட்க வேண்டும்,'' என்றான்.

கனகாவோ, ''இல்லை. மனைவி சொல்வதைத் தான் கணவன் கேட்க வேண்டும். இதை இவனுக்கு எடுத்துச் சொல்,'' என்றாள். பிசாசும், ''ஓர் அறிவாளி சொல்வதைத் தான் மற்றவர் கேட்க வேண்டும். உங்களில் யார் அறிவாளி என்று கண்டுபிடிக்க வேண்டும். அதன் பிறகே நான் தீர்ப்பு கூற முடியும். இருங்கள், இதோ வருகிறேன்,'' என்று கூறிப் புளிய மரத்தில் ஏறி இரண்டு பைகளை எடுத்துக் கொண்டு வந்தது.

அது அவர்களிடம், ''இப்பைகள் ஒவ்வொன்றிலும் ஐம்பது தங்க நாணயங்கள் உள்ளன. இவற்றை ஆளுக்கு ஒன்றெனக் கொடுக்கிறேன். மூன்று மாதங்களில் இந்தப் பணத்தை அதிகரித்துக் கொண்டு இங்கே வாருங்கள். அப்போது யார் அறிவாளி என்று கூறுகிறேன். அதன்பின் தீர்ப்பிற்கு இருவரும் கட்டுப்பட வேண்டும்.

சம்மதமா?'' என்று கேட்டது. அவர்களும் அதற்குச் சம்மதிக்கவே, பிசாசு அவர்களிடம் ஆளுக்கு ஒரு பையாகக் கொடுத்துவிட்டுச் சென்றது.

அதன்பின் கனகா பிடிவாதமாகத் தன் அண்ணனின் வீட்டுக் கல்யாணத்திற்குச் சென்றாள். கந்தனோ தன் தந்தையைக் காணத் தன் தங்கையின் ஊருக்குச் சென்றான். கல்யாண வீட்டில் கனகாவிடம் பிசாசு கொடுத்த பணப்பையை யாரோ திருடிக் கொண்டு போய்விட்டான்.

கந்தனும் தன் தங்கையின் வீட்டில் பிசாசு கொடுத்த பையை ஜாக்கிரதையாக வைத்திராததால் யாரோ எடுத்துக் கொண்டு போய்விட்டான்.

கனகாவும் கந்தனும் தம் ஊருக்குத் திரும்பி வந்தார்கள். இருவரும் தம் பைகள் திருடு போனதைக் கூறி, ''நாம் மூன்று மாதமானதும் பிசாசிற்குப் பைகளைக் கொடுக்க வேண்டும். அவ்வளவு பணத்திற்கு எங்கே போவது? இருவரும் கடுமையாக உழைத்துப் பணம் சேர்த்து பிசாசிற்குக் கொடுத்துவிடுவோம்,'' என்று தீர்மானித்தார்கள்.

இதனால் அவர்கள் தொடர்ந்து மூன்று மாதம் சண்டை போடாமல் பணம் சேர்ப்பதில் முழு மூச்சுடன் ஈடுபட்டார்கள். இதைக்கண்டு ஊரார் ஆச்சரியப்பட்டனர்.

மூன்று மாதங்கள் கழிந்தன. அவர்கள் இருவரும் தாம் சேர்த்த பணத்தைத் தம் பைகளில் போட்டு எடுத்துக் கொண்டுபோய் பிசாசைச் சந்தித்தார்கள். அதனிடம் நடந்ததை அவர்கள் விவரமாகக் கூறினார்கள்.

அதைக் கேட்ட பிசாசு பலமாகச் சிரித்து, ''உங்கள் பைகளைத் திருடியது நானே. நீங்கள் இருவரும் சண்டை போடுவதை மறந்து வேலை செய்வதில் கவனம் செலுத்தினால் பணம் சேர்க்கலாம் என்பதை உங்களுக்கு அறிவுறுத்தவே இப்படிச் செய்தேன். இனிமேலும் சண்டை போடாமல் வேலை செய்து பணம் சம்பாதித்துச் சுகமாக இருங்கள்,'' எனக் கூறியது. மேலும் அவர்கள் கொண்டு வந்த பைகளை அவர்களுக்கே கொடுத்ததோடு தான் அவர்களிடமிருந்து திருடிய பணப் பைகளையும் கொடுத்தது.





# நெல்லிக்காய் தானம்!

வெகுகாலத்திற்கு முன் நல்லூரில் நாராயணன் என்ற பணக்காரர் இருந்தார். அவரது மனைவி லட்சுமி. இருவரும் தானதர்மங்களைச் செய்து வந்தார்கள். அவர்கள் தம் வீட்டின் பின் புறத்திலுள்ள நெல்லிக்காய் மரத்தைப் பூசித்து தினமும் ஒரு தங்க நெல்லிக்காயை யாராவது ஒரு ஏழைக்குத் தானமாகக் கொடுத்து வந்தார்கள்.

அத்தம்பதிகளுக்கு ஐந்து மகன்கள் இருந்தார்கள். மூத்த மகனுக்குக் கல்யாணம் ஆனதும் அவன் மனைவி வீட்டிற்கு வந்தாள். தன் மாமனார் தினமும் தங்க நெல்லிக்காய் தானம் செய்வது கண்டு, ''இப்படியே தானம் செய்தால் எங்களுக்கு எதுவும் மிஞ் சாது. எனவே வெள்ளி நெல்லிக் காயை தானம் செய்யுங்கள்,'' என் றாள். நாராயணனும் அப்படியே செய்யலானார்.

இரண்டாவது மகனுக்குத் திரு மணமாகியது. அவன் மனைவி வந்த தும் தன் மாமனார் செய்யும் தானத் தைக் கண்டு, ''ஐயோ! இப்படித் தானம் செய்தால் என்ன ஆவது? நீங் கள் வெள்ளி நெல்லிக்காய்க்குப் பதிலாக தாமிர நெல்லிக்காய் தானம் செய்யுங்கள்'' என்றாள்.

அவரும் அப்படியே செய்தார். இதுபோல மூன்றாவது மருமகள் வந்ததும் தாமிர நெல்லிக்காய்க்கு பதி லாக இரும்பு நெல்லிக்காய் தானம் கொடுக்கச் செய்தாள். நான்காவது மருமகள் வீட்டிற்கு வந்ததும், ''இரும்பு நெல்லிக்காயை தானம் செய்யக்கூடாது. சாதாரண நெல்லிக் காயை தானம் செய்யுங்கள்!'' என் றாள். நாராயணனும் லட்சுமியும் அப்படியே செய்தார்கள். ஐந்தாவது மருமகள் வீட்டிற்கு வந்ததும் ''இந்த தானம் தர்மம் என்பதெல்லாம் எதற்கு? சாதாரண நெல்லிக்காயை யும் தானமாகக் கொடுக்க வேண்

25 ஆண்டுகளுக்கு முன் அம்புலிமாமாவில் வந்த கதை

டாம்'' என்று கூறி அந்த தானத்தையும் நிறுத்திவிட்டாள். இதனால் நாராயணனின் பெயரும் புகழும் குறைந்தது.

அவர் தன் மனைவியிடம், ''நாம் இங்கே இவர்களோடு இருந்தால் நம்மால் எதையும் தானம் செய்ய முடியாது. எனவே கொஞ்சம் பணத்தை எடுத்துக் கொண்டு வேறு எங்காவது போய் தான தர்மங்களைச் செய்து கொண்டு காலம் கழிக்கலாம்,'' என்றார்.

லட்சுமியும் அதுவே சரி எனவே, இருவரும் தம் மகன்களிடம் சொல்லிக் கொண்டு ஊரிலிருந்து புறப்பட்டுச் சென்றார்கள்.

அவர்கள் காசிக்குப் போகும் வழியில் ஒரு ஊரருகே நெல்லிக்காய் மரங்களாக இருந்த ஒரு தோப்பைப் பார்த்தார்கள். நாராயணனன் அதை விலைக்கு வாங்கினார். அவருக்கு ஆயுர்வேத வைத்திய முறை தெரியும். அதனால் அவர் நெல்லிக்காய் லேகியம், நெல்லிக்காய்த் தைலம், நெல்லிக்காய்ச் சூர்ணம் என்றெல்லாம் தயாரித்து விற்கலானார்.

அதில் நல்ல வருமானம் வரவே. அவரும் லட்சுமியும் தானதர்மங்களைச் செய்து சுகமாகத் திருப்தியுடன் இருந்து வரலானார்கள்.

நல்லூரில் நாராயணனின் மகன்களோ தம் தந்தை வைத்திருந்த சொத்தை எல்லாம் வீண் செலவு செய்து முழுவதையும் கரைத்து விட்டு ஓட்டாண்டிகளாக ஆகி விட்டார்கள். அதனால் அவர்கள் காசிக்குப்போய் எப்படியாவது வாழ் நாட்களைக் கழிப்பது என்று தீர் மானித்து ஊரைவிட்டுப் புறப்பட்டார்கள். வழியில் ஒரு ஊரில் யாரோ



ஒரு பெரிய மனிதர் கோயில் கட்டுவது கண்டு அவர்கள் அங்கு தினக் கூலி வேலை செய்து தங்கிவிட்டனர்.

அந்தக் கோவிலைக் கட்டி வந்தது நாராயணன்தான். அவர் இப்போது லட்சாதிபதியாகிவிட்டார். எப்போதும் போல தானதர்மங்களைச் செய்து வந்தார். ஒரு நாள் லட்சுமி கோயில் நிர்மாண வேலையில் தன் மகன்களையும் மருமகள்களையும் கூலி வேலை செய்வது கண்டு திகைத்துப் போனாள். சட்டென அங்கிருந்து தன் வீட்டிற்குப் போய்த் தன் வேலைக்காரியை அனுப்பி அவள் கூலி வேலை செய்யும் தன் ஐந்து மருமகள்களையும் அழைத்து வரச் சொல்லி அனுப்பினாள்.

அவர்கள் வந்ததும் லட்சுமி தன் மூத்த மருமகளுக்கு ஒரு வெள்ளி நெல்லிக்காயையும், இரண்டாவது மருமகளுக்குத் தாமிர நெல்லிக்காயையும், மூன்றாவது மருமகளுக்கு இரும்பு நெல்லிக்காயையும், நான்காவது மருமகளுக்குச் சாதாரண நெல்லிக்காயையும் கொடுத்துவிட்டு ஐந்தாவது மருமகளைப் பார்த்து, ''உனக்குக் கொடுக்க ஒன்றுமே என்னிடம் இல்லை, என் மருமகளே!'' என்று கூறிப் புன்னகை புரிந்தாள்.

அப்போதுதான் அவர்களுக்குத் தம் எதிரில் இருப்பது தம் மாமியார் என்று தெரிந்தது. உடனே அவர்கள் லட்சுமியின் கால்களில் விழுந்து, ''எங்களை மன்னித்துவிடுங்கள்! உங்கள் அருமை பெருமை தெரியாமல் ஏதேதோ சொல்லிவிட்டோம். ஒரு வேலையையும் எங்கள் வீட்டுக்காரர்கள் செய்யாததால் நீங்கள் விட்டுப்போன சொத்தை எல்லாம் தொலைத்துவிட்டு இந்த நிலைக்கு வந்துவிட்டோம்,'' என்று கூறிக் கண்ணீர் வடித்தார்கள்.

அதன் பின் நாராயணனின் ஐந்து மகன்களும் வந்து தம் தாய் தந்தையரிடம் மன்னிப்புக் கோரினார்கள். நாராயணனும் அவர்களுக்குப் பணம் கொடுத்து வியாபாரம் செய்து முன்னுக்கு வந்து தானதர்மங்களைச் செய்து வரும்படி அறிவுரை கூறினார். அவர்களும் அதன்படி நடந்து தம் மனைவிகளுடன் சுகமாக வாழ்ந்து வரலானார்கள்.



அம்புலிமாமாவின்
அன்பளிப்பு

# வீர தீர பராக்கிரமன் 24

ஓவியம் : மகேஷ்.

சந்திரபுரியிலிருந்து திடீரெனப் போய்விட்ட நரேந்திரதேவனையும் ரவீந்திரதேவனையும் கண்டுபிடிக்க சர்ப்பதேசத்தை அடைந்தான் ஆதித்தன். பிடிபட்ட மலைச்சாதி தம்பதிகள் வாயிலாக அங்குள்ள ரகசியங் களைத் தெரிந்து கொண்டான். ஆதித்தனைப் பிடித்து வருவதாகக் கூறி படகில் சென்ற நரேந்திரதேவன் நடுவழியில் முதலைகளால் தாக்கப்பட்டுத் தன் கால்களையும் ஒரு கையையும் இழந்தான். தாந்திரீகன் நாகபந்துவை எதிர்க்க ஆதித்தன் தயாரானான்.

ஆதித்தனும் அவனது வீரர்களும் ரவீந்திரதேவனின் கூடாரங்களைச் சுற்றி வளைத்து அங்கிருந்தவர்களைப் பிடித்தனர்.

எங்கே,
உங்கள் தலைவன்?
எங்கே இருக்கிறான்
ரவீந்திரதேவன்?

ஐயா! அவர் தாந்திரீகர்
நாகபந்துவின் குகையில் எல்லா வசதிகளுடன்
அவரது விருந்தாளியாக இருக்கிறார்.

எதிரி வீரர்கள் சிறைப்பட்டது கேட்டு மலைவாழ் மக்கள் மகிழ்ச்சியில் தாரை, தப்பட்டைகளை முழக்கினர்.

இன்னும்
பலமாக
அடியுங்கள்!
அப்போதுதான்
தாந்திரீகன்
வெளியே
வருவான்.

இந்த
நேரத்தில்
தப்பட்டை
ஒலியா!

இப்படி
அடிப்பவர்கள் யார்? ஏன்
இந்த முழக்கம்?

சீடர்கள் மலைவாசிகளை எச்சரித்தனர்.

குகையைக் காவல் காக்கும் தாந்திரீகனின் சீடர்கள் வெளியே வந்தார்கள்.

நிறுத்துங்கள்
அடிப்பதை! நள்ளிரவில் குருவின்
அமைதியைக் கலைக்காதீர்கள்.

ஆதித்தனும் அவனது வீரர்களும் குகைக்குள் சென்றார்கள்.

உம்!
ரவீந்திரதேவனைத் தேடிப் பிடியுங்கள்!

சில சடங்குகளைச் செய்ய தயார் செய்து கொண்டிருந்த சீடர்கள் காலடி ஓசையைக் கேட்டார்கள்.

யார் நீங்கள்? எதற்காக இங்கே வந்தீர்கள்?

நில்லுங்கள் அங்கேயே! ஓர் அடி கூட எடுத்து வைக்காதீர்கள்!

சீடர்கள் திகைத்தனர். ஆதித்தனின் வீரர்கள் அவர்களைப் பிடித்து குகைக்கு வெளியே இழுத்துச் சென்றார்கள். வெளியே போகுமுன்...

நாங்கள் சொல்கிற படி செய்!

சரி அய்யா!

என்ன செய்கிறீர்கள்? எங்களை எங்கே கொண்டு போகிறீர்கள்?

குகையிலிருந்து வெளியேறும் போது நாகபந்துவின் சீடர்கள் தம் குருவுக்கு ஆபத்து என்பதைத் தெரிவிக்கத் தம்மிடமிருந்த பாத்திரங்களைக் கீழே போட்டு ஓசைப்படுத்தினார்கள்.

பாத்திரங்கள் விழுந்த சத்தம் கேட்டு நாகபந்து கண் விழித்தான்.

இந்த வேளையில் இதென்ன சத்தம்? யார் அங்கே?

தான் கேட்டதற்கு விடை வராமல் போகவே நாகபந்து தன் அறையில் இருந்து வெளியே வந்தான்.

என்ன நடக்கிறது? இங்கே இருந்தவர்கள் எல்லாம் எங்கே போனார்கள்?

குகையிலிருந்து வெளியே வந்ததும் நாகபந்து தப்பட்டை ஒலிகளைக் கேட்டான்.

ஆகா! அவர்கள் ஆதித்தனைப் பிடித்துக் கொண்டு வந்துவிட்டார்களா? இன்றுதான் என் கனவு நனவாகியது. அறுபதாவது யாகத்திற்குத் தயாராக வேண்டும்.

(தொடரும்)

## கேளிக்கை நேரம்

ஆகா! ஆற்றங்கரை
எவ்வளவு சில்லென்று
இருக்கிறது!

### வண்ணம் தீட்டுங்கள்!

இவற்றில் நீங்கள் வண்ணம் தீட்டவே கொடுக்கப்பட்டுள்ளன. உங்களது வண்ணப் பெட்டியை எடுத்து ஆரம்பியுங்கள்!

### அவனை வெளியே எடுங்கள்!

ஒருவன் இப்படத்தில் அவன் இருக்க வேண்டிய இடத்தில் இல்லை. அவனைக் கண்டு பிடித்து வெளியே கொண்டு வந்து சரியான இடத்தில் நிறுத்துங்கள்!



## எவ்வளவு திராட்சை?

இந்தக் கொத்தில் நன்கு பழுத்த திராட்சைகள் உள்ளன. அவை மொத்தம் எவ்வளவு என்று எண்ணிவிட்டுக் கூறுங்கள்.



## சரியாக இல்லை!

இந்தப் படத்தில் சில அவை இருக்க வேண்டிய விதமாய் இல்லை. ஓவியர் அவசரத்தில் இவ்வாறு வரைந்துவிட்டார். அவர் செய்த தவறுகளைக் கூறுங்கள்.

*(விடைகள் 66ம் பக்கதில்)*

RAJESH




# போட்டோ வாக்கியப் போட்டி







**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25ந் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/- போட்டி முடிவு ஜூன் 2003 இதழில் வெளியிடப்படும்.

போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

## வாழ்த்துக்கள்!

பிப்ரவரி 2003 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :

எம். கவிதா
4/G, லாடப் பிள்ளை குறுக்குச் சந்து
கீரத்துறை, மதுரை – 625 001.

பரிசு பெற்ற வாக்கியங்கள்





புன்னகைப் பெண் !
புதுமைப் பெண் !!

## கேளிக்கை நேரம் விடைகள் (பக்கம் 64-65)

எத்தனை திராட்சை? - 19 திராட்சைகள்.

சரியாக இல்லை! - 1. வாத்தின் காதுகள், 2 .முதலைக்குக் கொம்பு, 3. ஆற்றில் வளர்ந்துள்ள காட்டு மலர்கள், 4.அவனை வெளியே எடுங்களில் உள்ள மீன் தரையில், 5. புழுவாக உள்ளதற்கு இறக்கைகள்.

அவனை வெளியே எடுங்கள் - முயலருகே உள்ள மீன்

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 600 026 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : Viswam

